சினிமா வானிலே புதிய நட்சத்திரம் !

நாட்டியமணி

# வைஜயந்திமாலா

ஏவி எம் புரொடக்ஷன்ஸ்

# வாழ்க்கை

தமிழ்

வாழ்க்கையின் மேடு பள்ளங்களைச்
சித்தரிக்கும் ஒரு அற்புத சிருஷ்டி.

## விரைவில் வருகிறது




AVM
புரொடக்ஷன்ஸ்

# *Order your Copy*

## NOW !





## THE NATION'S LEADERS

MAHATMA GANDHI
RAJAGOPALACHARIAR
PANDIT NEHRU
VALLABHAI PATEL
PATTABHI SEETARAMAYYA
MRS. SAROJINI NAIDU

Each of six sheets beautifully printed in five colours by letterpress and off-set with a reproduction of an Artist's Drawing in Sepia.

REAL ART PAPER—SIZE 14"×19"

SEND YOUR ORDER NOW.
TRADE ENQUIRIES INVITED.

POSTAGE ANYWHERE IN INDIA BY REGD. POST. 4 ANNAS EXTRA.

**Rs. 1/4**
EACH

*Write for full particulars for special terms including overprinting your own name and address*

o

Also available at **HIGGINBOTHAMS**

**ASSOCIATED PRINTERS**
165, MOUNT ROAD, MADRAS & MAHATMA GANDHI ROAD, BANGALORE

உங்கள் பாதுகாப்புக்காக

# ஸாது தையல் நூல்

இப்போது *புதிய* பாக்கிங்கில் வருகிறது




★ அசல் ஸாது தையல் நூல் என்பதற்கு அத்தாட்சியான இந்த 3 அடையாளங்களும் இருக்கிறதா என்று கவனித்து வாங்குங்கள்.

1. மேல் அட்டையும், உள் குழாயும் அழகிய மெல்லிய பச்சை வர்ணத்தில் இருக்கும்.

2. 'ஸாது'வின் படம் சிகப்பும் பச்சையும் சேர்ந்த இரு—வர்ணம் பிரிண்டாக அச்சடிக்கப்பட்டிருக்கும்.

3. கோஹினூர் மில்ஸ் கோ. லிட். என்னும் பெயர், மத்தியிலுள்ள மெல்லிய பச்சைக்குழாயின்மேல் தெளிவாக அச்சடிக்கப்பட்டிருக்கும்.

★ போலிகளை வாங்கி ஏமாறாதீர்கள் ★ இந்த அடையாளங்கள்

ஸாது தையல் நூல் இவர்களால் மட்டுமே தயாரிக்கப்படுகிறது

## கோஹினூர் மில்ஸ் கோ. லிமிடெட்

ஏஜண்டுகள்.

**ஒல்லிக் இண்டஸ்ட்ரீஸ் லிட்.**

நூல் விற்பனைக்குப் பிரத்தியேக ஏஜண்டுகள்

**நகல்சந்த் லல்லுசந்த் லிட்.**

# பொது மக்களின் சோப்பு

## தனவந்தருக்கும் இன்பமளிப்பது

பரிபக்குவமடைந்து முப்பது வருஷங்களுக்கு அதிகமான கோத்ரேஜின் ஆராய்ச்சியும்—முதன் முதலாக தாவர எண்ணெய் சோப்புக்களில் நுண்ணிய ஆராய்ச்சியாளரும் தயாரிப்பவர்களுடையதுமான — இந்த பிரசித்தி பெற்ற சாவி மார்க் டாய்லெட் (ஸ்நான) சோப், இனிமையான மணமூட்டப்பட்டு, எளியவர்களின் பண நிலைமைக்கும் ஏற்றவாறு சாமானிய மனிதனுக்கும் தன்னையும் தன் குடும்பத்தையும் சுத்தமாயும் ஆரோக்யமாயும் வைத்துக்கொள்வதை ஓர் இன்பமயமாக்குகிறது.

நூற்றுக்கு நூறு பங்கு பரிசுத்தமானது. எடையை அதிகரிக்கச் செய்யும். எவ்விதமான கலப்படமும் இல்லாதது.

உங்களில் ஒவ்வொருவரும் இன்றே ஒரு பெட்டியைவாங்கி சீக்கிரமே திருப்தியைக் காணுங்கள்.




# கோத்ரெஜ் டர்க்கிஷ் பாத்

100 சதம் தூய்மைக்கும்

மிருகக் கொழுப்பற்றதென்பதற்கும் உத்திரவாதமானது

கோத்ரெஜ் சோப்ஸ், லிமிடெட்.
மதராஸ்: 104, பிராட்வே,
கொச்சின்: 6/30, கல்வத்தி.



# கல்கி

## பொருளடக்கம்

மலர் 9 | இதழ் 18 | டிசம்பர் 4 | விரோதி ஐ கார்த்திகை 19



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும் சம்பவங்களும் கற்பனையே.



கல்வியழகும்.
ஆடையணி அழகும்
கடாவ்
வாயில்கள்




மலர் 9 | தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 17

# என்ன சேதி?

## ஒட்டிக்கொண்ட பட்டம்

"யாமறிந்த மேயரிலே இராமசாமி நாயுடுபோல் இனிதாவ தெங்கும் காணோம்" என்ற புகழை நிலை நிறுத்தி விட்டு ஸ்ரீ எஸ். ராமசாமி நாயுடு மேயர் பதவியிலிருந்து விலகிக் கொண்டார். அவருடைய காலத்தில் சென்னை நகர சபையின் கூட்டங்கள் அமைதியாகவும் ஒழுங்காகவும் நடைபெற்றன. பலதரப்பட்ட அங்கத்தினர்களையும் சரிக்கட்டி, நயமான வார்த்தைகளைக் கொண்டு, ஒழுங்கை நிலைநாட்டி வந்தார். முன் எந்த மேயரின் காலத்திலும் நடந்ததைக் காட்டிலும் அதிகமான பிரச்னைகள் நகர சபைக் கூட்டங்களில் விவாதத்துக்கு வந்து 'பைஸல்' ஆயின. சென்னை நகரத்தின் 'முதல்வர்' என்ற ஹோதாவில் நகர மகா ஜனங்கள் அவரை எண்ணற்ற விழாக்களுக்கும் நிகழ்ச்சிகளுக்கும் அழைத்தார்கள். அவ்வளவு விழாக்களையும் நிகழ்ச்சிகளையும் சிறப்புடனே நடத்தி வைத்தார். தமிழ் நாடெங்கும் மேயர் ராமசாமி நாயுடுவை அழைத்து உபசாரங்களும் வரவேற்புகளும் நிகழ்த்தினார்கள். அவ்வளவையும் சளியாமல் அங்கீகரித்து அழைத்தவர்களை மகிழ்வித்தார். காலஞ் சென்ற தீரர் சத்தியமூர்த்திக்குப் பிறகு ஒரு வருஷ காலத்திற்குள் அதிகமான பொதுக் கூட்டங்களில் சொற்பொழிவுகள் நிகழ்த்தியவர் மேயர் ராமசாமி நாயுடு என்று சொல்லலாம். நகர சபை நிர்வாக உத்தியோகஸ்தர்களை நல்ல முறையில் மரியாதையுடன் நடத்தித் தாமும் மரியாதை பெற்றார். இன்னும் பல காலத்துக்கு அவரைப் பொது ஜனங்களும் நண்பர்களும் 'மேயர் ராமசாமி நாயுடு' என்றே சொல்லிக் கொண்டிருப்பார்கள். மேயர் பதவிக்கு அவர் அவ்வளவு தகுதியாக இருந்தபடியால் அந்தப் பட்டம் அவருடைய பெயருடன் அவ்வாறு ஒட்டிக்கொண்டு விட்டது. பொது மக்களுக்குத் தொண்டு செய்யக் கூடிய வேறு பொறுப்பான பதவி அவருக்குக் கிடைக்கும்போதுதான் மேயர் பட்டம் அவருடைய பெயரை விட்டுப் போகும். அப்போதும்கூட அநேகர் அவரை 'மாஜி மேயர்' என்றுதான் அழைத்துக் கொண்டிருப்பார்கள்.

## ஹைதராபாத்

இந்தியா சுதந்திரம் அடைந்த பின் மற்ற சமஸ்தானங்களைப் போல் ஹைதராபாத்தும் இந்திய சர்க்காரின் தலைமையை ஒப்புக் கொண்டிருக்குமாயின், வருந்தத் தக்க எத்தனையோ சம்பவங்கள் தவிர்க்கப் பட்டிருக்கும். ஆனால் துர் மந்திரிகளின் உபதேசத்தினால் நிஜாம் மன்னர் மதி மோசம் போனார். நிஜாம் சர்க்காரின் பிடிவாதத்தினால் ஹைதராபாத் சமஸ்தான ஜனங்களுக்கு ஏற்பட்ட இன்னல்கள் இன்னும்கூட முற்றிலும் தீர்ந்தபாடில்லை. போதாக்குறைக்கு ஹைதராபாத் காங்கிரஸ் தலைவர்களுக்குள் ஏற்பட்டிருக்கும் பிணக்கு பழைய நிஜாம் சர்க்காரின் பிடிவாதத்தைக் காட்டிலும் மோசமாக இருந்து வருகிறது.

ஹைதராபாத்தில் கொழுந்து விட்டு எரிந்த அராஜகத்தை அடக்கும் வேலை அநேகமாக முடிவடைந்து விட்டதால், இந்திய சர்க்கார் ராணுவ நிர்வாகத்தை ரத்து செய்து அங்கு சிவில் நிர்வாக முறையை அமுலுக்குக் கொண்டு வந்திருக்கிறார்கள். இந்திய சர்க்காரின் தலைமையை ஹைதராபாத் ஒப்புக் கொள்வதாக நிஜாம் மன்னர் இப்போது அதிகார பூர்வமாக அறிவித்திருக்கிறார்.

ஹைதராபாத் மீது போலீஸ் நடவடிக்கை எடுக்கும் வரையில் அதன் விதி நிஜாமின் கையிலும் அவரை ஆட்டி வைத்த ரஸாக்கர்களின் கையிலும் இருந்துவந்தது. போலீஸ் நடவடிக்கைக்குப் பிறகுதான் அங்கு ஜனங்கள் சுதந்திர மூச்சுவிட முடிந்தது. இனி அதன் விதி அந்தச் சமஸ்தானத்திலுள்ள ஒன்றரைக் கோடி மக்களின் கையில்தான் இருக்கிறது. ஏனெனில், இன்னும் சில மாதங்களில் அங்கு சர்வஜன வாக்குரிமையை அடிப்படையாகக் கொண்டு ஹைதராபாத் அரசியல் நிர்ணய சபைக்குத் தேர்தல் நடைபெறும். அந்தச் சபையினரே

ஹைதராபாத்தின் எதிர்கால விதியை நிர்ணயிக்கும் பொறுப்பை ஏற்றுக்கொள்வார்கள். அவ்வாறாக, நிஜாம் சர்க்காரின் சர்வாதிகார ஆட்சி அந்தகாரத்தில் சகிக்க முடியாத துன்பத்துக்கு ஆளான ஜனங்களின் வாழ்க்கையிலே ஜனநாயக ஜோதி உதயமாகப் போகிறது.

## சர்வதேச மேடையிலே

சர்வதேச மேடையான ஐக்கிய நாடுகள் சபையிலே ஒவ்வொரு வல்லரசும் உலகத்தில் ஜனநாயகத்தை நிலைநிறுத்த வேண்டும் என்று கூக்குரலிடுகிறது. ஒவ்வொரு வல்லரசும் மற்றொரு வல்லரசின் மீது குறைகூறுகிறது. ஆனால், சிறிய நாடுகளின் சுதந்திரப் பிரச்னை அந்தச் சபையிலே விவாதத்துக்கு வந்தால், ஏற்கனவே ஜனநாயகத்துக்காகப் பரிந்து பேசிய வல்லரசுகள் மேற்படி சிறிய நாடுகளுக்குச் சுதந்திர உரிமையை மறுக்கத் தயங்குவதில்லை. அத்தகைய சந்தர்ப்பங்களில் வல்லரசுகள் ஜனநாயக தர்மத்தைக் காற்றுவாக்கில் விட்டு விட்டு ராஜதந்திர முறையைக் கைக்கொள்கின்றன.

முன்பு ஆப்பிரிக்காவில் இத்தாலியின் ஆதிக்கத்தில் இருந்த சில காலனிகளை இத்தாலி சென்ற மகாயுத்தத்தில் இழந்து விட்டது. ஆனால், இழந்த காலனிகளை இத்தாலி மீண்டும் பெறவேண்டும் என்று சென்ற நாலு வருஷ காலமாக பிரிட்டன் முதலிய வல்லரசுகள் சூழ்ச்சி செய்து வந்தன. இந்தியா அந்தகைய சூழ்ச்சிக்கு முட்டுக் கட்டை போட்டு விட்டது. எந்தக் காலனியிலும் அதன் எதிர்கால அரசியலை அந்தந்தக் காலனியிலுள்ள ஜனங்களே நிர்ணயித்துக் கொள்ள உரிமை அளிக்கவேண்டும் என்பதே இந்தியாவின் கொள்கை. இந்தியாவின் விடாமுயற்சி காரணமாக அந்தக் கொள்கையை இப்போது ஐக்கிய நாடுகள் சபை அங்கீகரித்திருக்கிறது.

இது இந்தியாவுக்கு ஒரு பெரிய வெற்றி என்பதில் சந்தேகமில்லை. அதனால் லிபியா போன்ற தேசங்களில் மக்கள் மட்டற்ற மகிழ்ச்சியடைந்து, தங்களுக்கு விடுதலை வாங்கித் தருவதற்காகவும் உண்மையான ஜனநாயக தர்மத்தை உலகம் முழுதும் ஒப்புக்கொள்ளும்படி செய்வதற்காகவும் போராடி வரும் "இந்தியா நீடூழி வாழ்க" என்று கோஷம் செய்து வருகிறார்களாம். இந்தியாவின் உயர்ந்த கொள்கையும் இந்தியத் தலைவர்களின் நன் முயற்சியும் உலக தேசங்களின் மனதைக் கவர்ந்து வருகின்றன என்பதற்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

# சபாநாயகர் ஜாக்கிரதை!




ஆந்திர மாகாணப் பிரிவினை காரியாம்சத்தில் வரும்போது இந்தமாதிரி பிரிவினையும் நடைபெறலாம் என்று நமது சித்திரக்காரர் கற்பனை செய்கிறார்.

# கற்பக விருக்ஷம் கிடைத்தது!

பிரம்மாக்களின் மகோன்னதமான சிருஷ்டி வேலை மகா வெற்றியுடன் முடிவடைந்திருக்கிறது!

பாரதநாட்டில் இன்று வாழும் முப்பத்தைந்து கோடி மக்களின் வாழ்வையும், இனி அவர்களுடைய சந்ததியில் வரப்போகும் கோடானுகோடி மக்களின் வாழ்வையும் நிர்ணயிக்கும் புனிதமான கைங்கர்யம் உலகம் முழுதும் அதிசயிக்கத் தகுந்த முறையில் நிறைவேறி யிருக்கிறது.

பூரண சுதந்திர இந்தியக் குடியரசாகிய மாண்புமிக்க மாளிகை ஆயிரம் ஆயிரம் வருஷ காலமாயினும் ஆடாமல் அசையாமல் இருப்பதற்குற்ற நிரந்தரமான அஸ்திவாரம் அற்புதமாக அமைக்கப் பட்டிருக்கிறது.

இந்திய மகாஜனங்கள் கோரும் அரசியல் அபிலாஷைகளை நிறைவேற்றி வைக்கும், கோடிக்கணக்கான ஜனங்களின் தாபத்தைத் தணித்துத் தண்ணிழலைக் கொடுக்கும் பல நூறு கிளைகளுடன் கூடிய மாபெரும் கற்பக விருக்ஷம் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

சென்ற மாதம் இருபத்தாறும் தேதி சனிக்கிழமை சுபயோக சுபதினத்திலே காலை பதினொரு மணி அடித்ததும் முந்நூறுக்கு மேற்பட்ட பிரம்மாக்கள் அடங்கிய அரசியல் நிர்ணய மகா சபையிலே, இந்தியக் குடியரசின் அரசியல் திட்டம் தேசிய கோஷங்கள் முழங்க, சபையினரின் சந்தோஷ ஆரவாரம் வானளாவ, தேச பக்தர்கள் ஆனந்த பாஷ்பம் சொரிய அமோகமாக நிறைவேறியது.

இவ்வாறாக, அடுத்த மாதம் இருபத்தாறும் தேதியிலிருந்து பாரத நாடு எவ்விதக் களங்கமும் இல்லாத பூரண சுதந்திரக் குடியரசாக விளங்குவதற்குப் பூர்வாங்கமான காரியங்கள் எல்லாம் விக்கினமின்றி முடிவடைந்தன.

இப்போது நிறைவேறிய அரசியல் திட்டத்தை, சுதந்திர இந்தியக் குடியரசின் மகா சாஸனத்தை உருவாக்குவதற்காக அரசியல் நிர்ணய சபையினர் சென்ற மூன்று வருஷங்களாக அலுக்காமல் சலிக்காமல் உழைத்தனர்.

மாபெரும் கட்டிடமாயினும் அதை நிர்மாணிக்க ஒவ்வொரு செங்கல்லாக அடுக்கித்தானே தீரவேண்டும்?

அதைப் போலவே அரசியல் நிர்ணய சபையிலுள்ள பிரம்மாக்கள் ஒவ்வொரு வார்த்தையாக, ஒவ்வொரு வரியாக, ஒவ்வொரு பிரிவாக, ஒவ்வோர் அத்தியாயமாகப் பரிசீலனை செய்து அந்தத் திட்டத்தை நிறைவேற்றினர்.

எனவே, அவர்கள் யாவரும் மக்களின் மனப்பூர்வமான பாராட்டுதலுக்கு உரியவர்களாகி யிருக்கிறார்கள்.

சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த இந்திய அரசியல் மகா சாஸனத்தை முப்பத்தைந்து கோடி மக்களும் மனமுவந்து மகிழ்ச்சியுடன் வரவேற்பார்கள் என்பதில் ஐயமில்லை.

கோடிக்கணக்கான மக்களின் ஆர்வத்தையும் ஆதரவையும் அஸ்திவாரமாகக் கொண்டு சுதந்திர இந்தியக் குடியரசு ஜனனமாகப்போகிறது!

• • •

இப்போது நிறைவேறியுள்ள அரசியல் திட்டத்தில் ஜனநாயகத்தின் அடிப்படையான பல விசேஷ அம்சங்கள், அதாவது ஜீவாதார உரிமைகள் அடங்கி யிருக்கின்றன.

முக்கியமாக மதம், ஜாதி, சமயம், ஆண், பெண், பிறப்பிடம் காரணமாக யாருடைய விஷயத்திலும் இந்திய சர்க்கார் எவ்வித வேற்றுமையும் காட்ட மாட்டார்கள்.

தீண்டாமை என்ற கொடிய சாபக்கேடு அடியோடு ஒழிக்கப்பட்டிருக்கிறது.

ஜாதி மத சமய வகுப்பு பேதமின்றி எல்லோரும் அரசாங்கத்தில் எந்தப் பதவியும் வகிக்க உரிமை பெற்றிருக்கிறார்கள்.

ஏழைத் தொழிலாளிகள்கூட இந்தியாவின் ஜனாதிபதியாகவும் மந்திரிகளாகவும் வருவதற்குச் சந்தர்ப்பம் அளிக்கப் பட்டிருக்கிறது.

இந்தியப் பிரஜைகள் யாவருக்கும் பேச்சுச் சுதந்திரமும் எழுத்துச் சுதந்திரமும் மதச் சுதந்திரமும் அளிக்கப்பட்டிருக்கின்றன.

ஜீவாதார உரிமைகளை அமுலுக்குக் கொண்டு வரும்படி சுப்ரீம் கோர்ட்டு மூலம் சர்க்காரை

வற்புறுத்த ஒவ்வொரு தனி நபருக்கும் பூரண உரிமையுண்டு.

பிரஜா உரிமை அளிக்கும் விஷயத்தில் புதிதாகச் சுதந்திரம் பெற்ற சில நாடுகளைப் போல் இந்தியா அரசியல் தர்மத்தைப் புறக்கணித்து விடவில்லை.

இந்திய அரசியல் திட்டம் அமுலுக்கு வருமுன் இந்தியாவில் நிரந்தரமாக ஸ்தாபித்தவர்கள், இந்தியாவில் பிறந்தவர்கள், இந்தத் தேசத்தில் தாய் அல்லது தந்தையை உடையவர்கள் எல்லாரும் இந்தியப் பிரஜைகளாகக் கருதப்படுவார்கள்.

மேலே குறிப்பிட்டவர்களைத் தவிர, இந்தியாவில் ஐந்து வருஷங்களுக்குக் குறையாமல் வசித்தவர்களுக்கும் பிரஜா உரிமை அளிக்கப்படும்.

தேசத்தின் ஒற்றுமையைக் குலைத்து வந்த தனித் தேர்தல் தொகுதி முறை ஒழிக்கப்பட்டிருக்கிறது. எனினும், தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கும் ஆங்கிலோ இந்தியர்களுக்கும் பத்து வருஷ காலத்துக்குச் சலுகைகள் அளிக்கப்பட்டிருக்கின்றன.

இந்திய அரசாங்க பாஷை நிர்ணயிக்கப் பட்டிருக்கிறது. மாகாண பாஷைகளுக்கும் விசேஷ கௌரவம் அளிக்கப்பட்டிருக்கிறது.

அரசியல் திட்டத்தை அங்கீகரித்து அதற்கு ஆசி கூறிய அரசியல் நிர்ணய சபைத் தலைவர் பாபு ராஜேந்திரப் பிரசாத் பாரத நாட்டு மக்களின் கடமைகளை வற்புறுத்தினார்.

மேற்படி திட்டம் நிறைவேறியதுடன் அரசியல் நிர்ணய மகா சபையின் கடமை முடிந்துவிட்டது.

இனி அந்தத் திட்டம் வெற்றிகரமாக அமுல் நடத்தப்படுவதும் படாததும் இந்திய மகாஜனங்களின் கையில்தான் இருக்கிறது என்று கூறினார்.

புதிய அரசியல் திட்டத்திலுள்ள மிக மிக முக்கிய அம்சம், வயது வந்தவர் எல்லோருக்கும் வாக்குரிமை அளித்திருப்பதுதான்.

"நமது நாட்டில் நூற்றுக்குப் பத்துப் பேர்தான் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள்; எனவே பத்து சத விகித ஜனங்களுக்குத்தான் வாக்குரிமை அளிக்கவேண்டும்" என்று கூறும் அரசியல் பண்டிதர்களின் யோசனையைப் பெரும்பாலான பிரதிநிதிகளும் ஏற்க மறுத்து விட்டார்கள்.

"எழுதப்படிக்கத் தெரிந்தவர்களின் தொகை உயர்வதற்குத் தகுந்தவாறு வாக்குரிமை பெறுவோரின் தொகையை உயர்த்த வேண்டுமேயன்றி, திடீ

றென்று சர்வஜன வாக்குரிமை அளிப்பது ஆபத்தாகும்'' என்று சிலர் எச்சரித்ததையும் சபை அங்கத்தினர்கள் லட்சியம் செய்யவில்லை.

அதாவது இந்தியக் குடியரசின் தலைவர் முதல், மந்திரிகள், சட்டசபை அங்கத்தினர்கள் வரையில் எல்லோரையும் தேர்ந்தெடுக்க இந்தியாவிலுள்ள பெண்கள் உள்பட வயது வந்த எல்லா ஜனங்களுக்கும் உரிமை அளிக்கப்படுகிறது.

**எனவே, இந்தத் திட்டம் இந்திய ஜனங்களின் திட்டம் என்பதில் என்ன சந்தேகம்?**

**இத்தகைய திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு ஏற்படும் அரசாங்கம், ஜனங்களுக்காக ஜனங்களால் நடத்தப்படும் ஜனங்களுடைய அரசாங்கமாக இருக்கும் என்பதிலும் சந்தேகம் இருக்க முடியுமா?**

**எனவே, தகுதி வாய்ந்த சிலரையே தேர்ந்தெடுப்பதன் மூலம் இந்தியக் குடியரசை உண்மையான குடியரசாகச் செய்யும் சக்தி ஜனங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது.**

"இந்திய ஜனங்களில் பெரும்பாலோரும் கிராமங்களில் இருக்கிறார்கள். அவர்களிடம் எனக்குப் பூரண நம்பிக்கை உண்டு. அவர்கள் அறிவும் ஆற்றலும் பண்பாடும் உள்ளவர்கள். எனவே அவர்கள் தங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள வாக்குரிமையைத் தகுந்த முறையில் பயன்படுத்திக் கொள்ளுவார்கள் என்பது நிச்சயம்'' என்று சபைத் தலைவர் ராஜன்பாபு கூறினார்.

அவருடைய நம்பிக்கைக்குத் தாங்கள் பாத்திரர்கள் என்பதை நிரூபிக்கும் அரிய சந்தர்ப்பம் இந்தியப் பொது மக்களுக்கு இன்னும் சில மாதங்களில் கிடைக்கப்போகிறது.

* * *

இந்திய சர்க்காரின் சட்ட மந்திரியும் சுதந்திர அரசியலைத் தயாரிப்பதில் முக்கிய பங்கு எடுத்துக் கொண்டவருமான டாக்டர் அம்பேத்கார், அரசியல் திட்டத்தை நிறைவேற்றும்படி சபையைக் கேட்டுக்கொண்டு நிகழ்த்திய பிரசங்கத்தை ஒவ்வொருவரும் ஊன்றிப் படிக்கவேண்டியது அவசியமாகும்.

அரசியல் திட்டத்திலுள்ள பல அம்சங்களையும் அவர் விளக்கிக் கூறினார்; ஆட்சேபணைகளுக்குத் தக்க பதில் அளித்தார்; புகார்களைத் தகுந்த ஆதாரங்களுடன் தகர்த்தெறிந்தார்.

ஜனங்களிடையே உயர்வு தாழ்வு என்ற மனோபாவம் அறவே ஒழிந்து சமத்துவமும் சகோதரத்துவமும் நிலவினாலன்றி, பெற்ற சுதந்திரம் பரிமளிக்க முடியாது என்பதைப் பழைய சரித்திர சம்பவங்களை உதாரணமாகக் கொண்டு எடுத்துக் காட்டினார்.

"நம்முடைய கடைசித் துளி இரத்தத்தைச் சிந்தியாவது சுதந்திரத்தைப் பாதுகாப்போம்'' என்று பிரதிக்ஞை செய்துகொள்ளும்படி இந்திய மக்களை டாக்டர் அம்பேத்கார் மன்றாடிக் கேட்டுக் கொண்டார்.

"எவ்வளவோ பாடுபட்டுப் பெற்றுள்ள சுதந்திரத்தைப் பேணிப் பாதுகாக்கவேண்டும் — இதனால் பாமர மக்கள் யாவரும் துன்பம் நீங்கி இன்புறும்படி செய்யவேண்டும்—இதுதான் நமது முழு முதற்கடமை'' என்று அரசியல் நிர்ணய சபைத் தலைவர் ராஜன் பாபுவும் கேட்டுக் கொண்டார்.

இந்திய சரித்திர சம்பவங்களைப் பரிசீலனை செய்வோமாயின், ஓர் உண்மை சந்தேகமின்றித் தெரிகிறது.

அதாவது இது வரையில் இந்தியாவுக்கு நேர்ந்த கஷ்டங்களுக் கெல்லாம் காரணம், முக்கியமாக இந்தியா அன்னியரின் ஆக்கிரமத்துக்கு ஆளாகிச் சுதந்திரத்தை இழந்ததற்குக் காரணம் ஒற்றுமைக்குறைவும் உள்நாட்டுச் சண்டையும்தான் என்பது ருஜுவாகிறது.

ஆதியில் வீர ரஜபுத்திரர்களிடையே ஒற்றுமை நிலவியிருந்தால், பாரத புண்ணிய பூமியில் மொகலாய சாம்ராஜ்யம் ஏற்பட்டிராது.

ஹிந்து மன்னர்களும், மகாராஷ்டிர வீரர்களும் பகைவரை எதிர்த்துப் போர் புரிந்த காலத்தில், அவர்களிடையே இருந்த சில துரோகிகள்தான் பகைவர்களுக்கு உதவி புரிந்து தாய் நாட்டைக் காட்டிக் கொடுத்தனர்.

1857-ம் வருஷம் ஆங்கிலேயரை எதிர்த்துச் சுதந்திர யுத்தம் நடந்தபோது, இந்திய மன்னர்களில் சிலர்தான் தேசபக்தர்களை முறியடிக்கும் விஷயத்தில் ஆங்கிலேயர்களுக்குப் பக்க பலமாக நின்று பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தை நிலை நிறுத்தினர்.

எனவே, இனியும் அத்தகைய விபரீதம் நேருவதற்கு இந்திய மக்கள் இடம் கொடுத்து விடலாமா?

எவ்வளவோ கஷ்டப்பட்டு, எத்தனையோ ஆண்டுகள் போராடி, எல்லையற்றத் தியாகங்கள் புரிந்து, கண்ணீர் விட்டுப் பெற்ற கண்ணினுமினிய சுதந்திரத்தை "இனி எக்காலத்திலும் கைவிடோம், கைவிடோம்'' என்று பிரதிக்ஞை செய்து கொள்வோமாக!

**பார்க்கப் பார்க்கத் தெவிட்டாத சித்திரம்..**



**ஜெமினியின் அபூர்வ சகோதரர்கள்**

இப்பொழுது சென்னை பிரபாத், வெலிங்டன் இரு தியேட்டர்களிலும் மற்றும் இந்தியா முழுவதும் நடை பெறுகிறது..





சென்னையில்: தினசரி 3 காட்சிகள் 3, 6-15 & 9-30 மணி

பிரதி தினமும் காலை 9 முதல் 12 மணி வரை, முதல் இரண்டு வகுப்புகளுக்கும் பிரபாத், வெலிங்டன் தியேட்டர்களில் டிக்கட்டுகளை முன்னதாகவே பெற்றுக் கொள்ளலாம்



# தமிழ் இசைச் சங்கம், சென்னை

## ஏழாவது தமிழ் இசை விழா 1949—50

அரண்மனைக்காரத் தெருவிலுள்ள செயிண்ட்மேரி மண்டபத்தில்

தொடக்க விழா 23-12-49 மாலை 5-30 மணிக்கு

திறப்பாளர்: அரசவைக் கவிஞர் திரு. நாமக்கல் இராமலிங்கம் பிள்ளை அவர்கள்

வரவேற்புக் கழகத் தலைவர்: திரு. என். இராமசாமி நாயுடு அவர்கள் (சென்னை நகர முன்னாள் மேயர்)

| | | |
|---|---|---|
| 1<br>23—12—49<br>வெள்ளிக்கிழமை<br>மாலை 6—30 | பத்மினி, ஹேமமாலினி | — பாட்டு |
| 2<br>24—12—49<br>சனிக்கிழமை<br>மாலை 5-30 | எம். கே. தியாகராஜ பாகவதர் | — பாட்டு |
| | மைசூர் டி. குருராஜப்பா | — பிடில் |
| | குத்தாலம் சிவவடிவேல் பிள்ளை | — மிருதங்கம் |
| | ஆலங்குடி இராமச்சந்திரன் | — கடம் |
| | மன்னார்குடி நடேச பிள்ளை | — மோர்சிங் |
| 3<br>25—12—49<br>ஞாயிற்றுக்கிழமை<br>மாலை 5-30 | என். சி. வசந்தகோகிலம் | — பாட்டு |
| | ஆர். எஸ். கோபால கிருஷ்ணன் | — பிடில் |
| | கல்பாத்தி இராமநாதன் | — மிருதங்கம் |
| | வில்வாத்திரி ஐயர் | — கடம் |
| 4<br>26—12—49<br>திங்கட்கிழமை<br>மாலை 5-30 | செம்பை வைத்தியநாத பாகவதர் | — பாட்டு |
| | சேதுராமையா | — பிடில் |
| | வேலூர் இராமபத்திரன் | — மிருதங்கம் |
| | மாஸ்டர் திரவியம் | — கஞ்சிரா |
| 5<br>27—12—49<br>செவ்வாய்க்கிழமை<br>மாலை 5-30 | எம். எஸ். சுப்புலட்சுமி | — பாட்டு |
| | மைசூர் டி. சௌடையா | — பிடில் |
| | கல்பாத்தி இராமநாதன் | — மிருதங்கம் |
| | ஆலங்குடி இராமச்சந்திரன் | — கடம் |
| 6<br>28—12—49<br>புதன்கிழமை<br>மாலை 5-30 | மதுரை மணி ஐயர் | — பாட்டு |
| | மாயவரம் கோவிந்தராஜ பிள்ளை | — பிடில் |
| | இராமநாதபுரம் சி. எஸ். முருகபூபதி | — மிருதங்கம் |
| 7<br>29—12—49<br>வியாழக்கிழமை<br>மாலை 5-30 | எம். எம். தண்டபாணி தேசிகர் | — பாட்டு |
| | வி. கோவிந்தசாமி நாயக்கர் | — பிடில் |
| | பழநி எம். சுப்பிரமணிய பிள்ளை | — மிருதங்கம் |
| | வில்வாத்திரி ஐயர் | — கடம் |
| 8<br>30—12—49<br>வெள்ளிக்கிழமை<br>மாலை 5-30 | குமாரி ராதா | — பரத நாட்டியம் - அபிநயம் |
| | எம். எஸ். சுப்புலட்சுமி | — பதம் பாடுவார்கள் |
| 9<br>31—12—49<br>சனிக்கிழமை<br>மாலை 5-30 | பால சரஸ்வதி | — பரத நாட்டியம் - அபிநயம் |
| 10<br>1—1—50<br>ஞாயிற்றுக்கிழமை<br>மாலை 5-30 | கே. பி. சுந்தராம்பாள் | — பாட்டு |
| | இராமநாதபுரம் எம். என். கணேச பிள்ளை | — பிடில் |
| | புதுக்கோட்டை தட்சிணாமூர்த்தி ஆசாரி | — மிருதங்கம் |
| | ஆலங்குடி இராமச்சந்திரன் | — கடம் |
| | மாரிமுத்தாப் பிள்ளை | — கஞ்சிரா |
| 11<br>2—1—50<br>திங்கட்கிழமை<br>மாலை 5-30 | சித்தூர் சுப்பிரமணிய பிள்ளை | — பாட்டு |
| | பி. கே. விஸ்வநாத சர்மா | — பிடில் |
| | தஞ்சாவூர் இராமதாஸ் ராவ் | — மிருதங்கம் |
| | மன்னார்குடி வைத்திலிங்கம் பிள்ளை | சொன்னகோல் |
| | மாஸ்டர் சியாமசுந்தரம் | — கஞ்சிரா |

கட்டணம்: சீசன் முதல் வகுப்பு ரூபாய் 30-0-0; இரண்டாம் வகுப்பு ரூபாய் 20-0-0

சீசன் டிக்கட்டுகள் தமிழ் இசைச் சங்கக் காரியாலயத்தில் (8/9, சிக்கன்னா நாயக்கன் தெரு, சென்னை) கிடைக்கும்

ஒலிபெருக்கி ஏற்பாடு:—அசோசியேட்டட் ரேடியோ ஏஜன்சீஸ், தெப்பக்குளம், திருச்சி

# கலைவாணர்

# என்.எஸ்.கிருஷ்ணன்

பரோபகாரம் செய்வது போன்ற புண்ணியம் வேறு ஒன்றுமில்லை. பரோபகாரங்களில் மிகச்சிறந்த பரோபகாரம் எது என்று எண்ணிப் பார்த்தால், வாழ்க்கையில் மகிழ்ச்சி இல்லாமல் காலங் கழிப்பவர்களுக்கு மகிழ்ச்சி அளிப்பதுதான் என்று ஏற்படும். பரோபகாரம் செய்கிறவர்கள், அதாவது பிறரை மகிழச் செய்கிறவர்கள் சொர்க்கத்துக்குப் போவார்கள் என்பது உண்மையானால், கலைவாணர் என். எஸ். கிருஷ்ணனுக்குச் சொர்க்கங்களுக்குள்ளே மிக மேலான சொர்க்கத்தைக் கொடுத்தே தீர வேண்டும்.

தமிழ்நாட்டில் எத்தனை லட்சக்கணக்கான மக்களை எத்தனை தடவை கலைவாணர் கிருஷ்ணன் சந்தோஷப் படுத்தியிருக்கிறார், குலுங்கச் சிரித்து மகிழும்படி செய்திருக்கிறார் என்று கணக்குச் சொல்ல முடியாது. ஆனால் ஒரு கணக்கு நமக்குத் தெரியும். ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன் சினிமாவில் நடிக்க ஆரம்பித்து வருஷம் பதினைந்து ஆகிறது. இந்தப் பதினைந்து ஆண்டில் எத்தனை பேசும்படங்களில் அவர் நடித்திருக்கிறார் என்று நாம் சொல்ல முடியும்.

பிரமிக்கத் தக்க எண்ணிக்கைதான்! மொத்தம் 92 பேசும்படங்களில் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன் இது வரை நடித்திருக்கிறார். அத்தனை படங்களிலும் அவருடைய ஹாஸ்ய நடிப்பைப் பார்த்தும் நகைச்சுவை நிறைந்த பேச்சைக் கேட்டும் எண்ணற்ற மக்கள் சிரித்து மகிழ்ந்திருக்கிறார்கள். ஆயினும் அவர்கள் அலுத்துப் போய்விடவில்லை. கலைவாணர் கிருஷ்ணனின் நகைச் சுவை இன்னும் ஜனங்களுக்குத் திகட்டிப் போய்விடவில்லை. அவர் நடிக்கும் 93-வது படம் எப்போது வெளியாகும் என்று எதிர் நோக்கிக் கொண்டிருக்கிறார்கள்!

அத்தகைய இணையில்லாத ஆற்றலை, திகட்டாத நகைச் சுவைச் செல்வத்தை, ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன் பெற்றிருக்கிறார். அந்த ஆற்றலையும் செல்வத்தையும் அவருக்கு அருளிய இறைவனுக்கு நம்முடைய மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறோம்.

* * *

நம்முடைய காலத்தில் தமிழர்களின் வாழ்க்கையைக் குதூகல மயமாகச் செய்து வரும் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன், கலைத் திறமை படைத்த சினிமா நடிகர் மட்டும் அல்ல. அவர் தலை சிறந்த பொதுஜனத் தொண்டர். தமிழ் மக்களின் சமூக வாழ்க்கையில் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணனுக்கு ஒரு முக்கியமான ஸ்தானம் உண்டு.

நமது சமூக வாழ்க்கையில் உள்ள பல குறைபாடுகளையும் போக்க வேண்டுமென்பதில் அளவில்லாத ஆர்வங் கொண்ட சீர்திருத்தக்காரர் திரு என். எஸ். கிருஷ்ணன். சமூகத்திலுள்ள ஏற்றத் தாழ்வுகளையும் அநீதிகளையும் கொடுமைகளையும் கண்டு அவர் உள்ளம் கொதிக்கிறது.

நம்மிலே அறிவாளிகள், படித்தவர்கள் என்று சொல்லப்படுகிறவர்களிடம் கூட எத்தனை குருட்டு நம்பிக்கைகள் குடி கொண்டிருக்கின்றன என்பதைக் கவனிக்கும்போது ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன் அழுகிறதா, சிரிக்கிறதா என்று தெரியாமல் திண்டாட வேண்டியிருக்கிறது.

உதாரணமாக, நம்மவர்களுக்குச் சகுனம் பார்ப்பதில் உள்ள அபார நம்பிக்கையைப் பாருங்கள். ஏதாவது ஒரு காரியமாகப் புறப்படும்போது ஒரு பூனைக்குட்டி குறுக்கே சென்றால், தொலைந்தது அந்தக் காரியம். ஆசாமி புறப்படுவதே இல்லை. காரியம் எப்படி நடக்கும்? பூனைக்குட்டிக்கு அத்தனை அபாரமான சக்தியை மக்களின் குருட்டு நம்பிக்கை கொடுத்துவிடுகிறது.

இன்னும் நாள், நட்சத்திரம், யோகம், ராகுகாலம், தியாஜ்யம், ராசிபலன், வார பலன், வருஷ பலன் ஆகியவற்றைப் பார்ப்பதில் எத்தனை எத்தனை காலத்தைக் கழித்து விடுகிறோம்? மனிதனுடைய காலம் மிக விலை உயர்ந்த பொருள். அதைக் கூட்




டவோ குறைக்கவோ நம்மால் முடியாது. அப்படிப்பட்ட அருமையான காலத்தை எப்படி யெல்லாம் வீணாக்கி விடுகிறோம்!

இம்மாதிரி எத்தனையோ குருட்டு நம்பிக்கைகள் இந்த அறிவாராய்ச்சி மிகுந்த நாட்களிலே கூடச் சமூகத்தைப் பாழாக்கி வருகின்றன. இப்படிப்பட்ட பல மூடநம்பிக்கைகளையும் எதிர்த்துக் கலைவாணர் கிருஷ்ணன் போர் புரிந்து வருகிறார். அந்தப் போருக்கு ஆயுதமாக வில்லுப் பாட்டையும் காலட்சேபக் கலையையும் கையாண்டு வருகிறார்.

கலைவாணர் கிருஷ்ணன் நடத்தும் காந்தி மகான் சரித்திர வில்லுப் பாட்டும், கிந்தனார் காலட்சேபமும் தமிழ்நாட்டில் சில காலமாகப் பிரசித்தி யடைந்திருக்கின்றன.

வில்லுப் பாட்டு என்பது தென் பாண்டிய நாட்டுக்குத் தனி உரிமையான ஓர் அபூர்வ கலை. வில்லடிக்கும் நாதமும் பானையடிக்கும் முழக்கமும் உடுக்கையின் சத்தமும் பக்கப் பாட்டுக்காரர்களின் அட்டகாசமும் துணை செய்ய, வில்லுப்பாட்டு வித்வான் கவியாகவும் வசனமாகவும் கதை சொல்லி, கேட்பவர்களை ஆவேச வெறி ததும்பும் ஒரு புது உலகத்துக்குக் கொண்டுபோய் விடக் கூடிய கலை. ஏறக்குறைய அழிந்து போய் விட்டது என்ற நிலையில் இருந்த அந்தக் கலைக்கு ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன் புத்துயிர் கொடுத்துக் காந்தி மகான் கதையைச் சொல்லி வருகிறார். "நல்ல தம்பி" என்னும் படத்தில் நல்ல தம்பி காந்தி மகாத்மா படத்தைக் காட்டி "இவர்

என் கடவுள்" என்று சொல்லுவது நேயர்களுக்கு வினோதமிருக்கலாம். அத்தகைய பக்தியுடன் மகாத்மா காந்தியின் சரித்திரத்தைக் கலைவாணர் கிருஷ்ணன் வில்லுப் பாட்டு மூலம் பிரசாரம் செய்து வருகிறார். மெத்தப் படித்த அறிவாளிகளும் படிப்பில்லாத பாமரர்களும் ரசித்து அநுபவிக்கும்படியான முறையில் வில்லுப் பாட்டுக் கலையைக் கையாளுகிறார்.

சாதி உணர்ச்சிகளைப் போக்கிக் கல்வியின் பெருமையை நிலைநாட்டும் 'கிந்தனார் காலட்சேபம்' எத்தனை தடவை கேட்டாலும் அலுப்பதில்லை. அவ்வளவு கற்பனையும் கலையும் அதில் பொருந்தியிருக்கின்றன.

* * *

சமீப காலத்தில் கலைவாணர் கிருஷ்ணன் பல உதவிக் கச்சேரிகள் நடத்திக் கல்வி ஸ்தாபனங்களுக்கும் மற்றும் பொது நலக் காரியங்களுக்கும் பணம் சேகரித்துக் கொடுத்து வருவது அனைவரும் அறிந்ததே. கடவுள் அருளால் தமக்குக் கிடைத்திருக்கும் கலைத் திறனை இப்படிப் பொதுமக்களின் நன்மைக்காக அவர் உபயோகப்படுத்தி வருவதைத் தமிழ் உலகம் பெரிதும் பாராட்டுகிறது.

* * *

வலது கையினால் கொடுப்பது இடது கைக்குத் தெரியாதபடி பல தர்மங்களைச் செய்திருப்பவர் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணன். ஆனால் அவரே மறைக்க முயன்றாலும் மறைபடாத வண்ணம் ஒரு அரும் பெரும் கைங்கரியமும் அவர் சமீபத்தில் செய்து முடித்திருக்கிறார். நாகர்கோவிலில் காந்தி மகானின் ஞாபகார்த்தமாக நாற்பதினாயிரம் ரூபாய் செலவில் ஒரு ஸ்தூபம் அமைத்து அதன் அடிப் பகுதியில் மகாத்மாவின் போதனைகளை எழுதுவித்திருக்கிறார்.

* * *

கலைவாணர் கிருஷ்ணன் சிறந்த தமிழ் அன்பர். அவர் படங்களில் நடிக்கும்போது தூய தமிழ் மொழியைக் கையாண்டு தெளிவாகப் பேசுகிறார். படங்களின் மூலமாகவும், வில்லுப்பாட்டுக் காலக்ஷேபங்களின் மூலமாகவும் நல்ல தமிழைப் பரப்புவதற்குப் பேருதவி செய்திருக்கிறார். திருவள்ளுவர் வரலாற்றை வில்லுப்பாட்டில் அமைத்துக் கச்சேரி செய்யப்போவதாக அவர் தெரிவித்திருப்பது தமிழ் மக்களுக்கு அளவில்லாத மகிழ்ச்சி அளித்திருக்கிறது.

* * *

சிறந்த கலைத் திறனையும், உயர்ந்த நகைச் சுவையையும், முதிர்ந்த தமிழுணர்வையும் ஸ்ரீ என். எஸ். கிருஷ்ணனுக்கு அளித்த இறைவன் அவருக்கு ஸ்ரீ டி. ஏ. மதுரத்தையும் அளித்திருக்கிறார். கலைவாணர் கிருஷ்ணனின் வாழ்க்கையும் கலைத் திறனும் பொது நலத் தொண்டும் ஸ்ரீமதி டி. ஏ. மதுரத்தின் கூட்டுறவின் மூலமாகச் சுடர்விட்டு ஒளிர்கின்றன. பரோபகாரத்துக்கே பிறந்த இந்தத் தம்பதிகள் நீடூழி வாழ்ந்து கலைத் தொண்டு புரிந்து வருவார்களாக.

# அவர் நம்பிக்கை!



க்யூவில் ஒருவர் :—ஸார்! தயவு செய்து என் இடத்தைக் கொஞ்சம் பார்த்துக் கொள்ள முடியுமா? எதிரே உள்ள தியேட்டரில் நடக்கிற சினிமாவைப் பார்த்துவிட்டு வந்து மறுபடியும் நிற்கிறேன்!

# கடல் கன்னி

## 8. முழுமதியின் கல்யாணம்

இவ்வாறு குதிரையை வாங்கிய கிழவி வேறு யாருமல்ல, மந்திர ராணி லாயேயின் தாயார்தான். இவள்தான் தன் பெண்ணுக்கு மந்திரம் சொல்லித் தந்தது. முழுமதி குதிரையிலிருந்து இறங்கியதும், கிழவி கொஞ்சம் ஜலத்தைக் குதிரை மீது தெளித்து "அருமை மகனே! உன் பழைய உருவத்தை அடைவாயாக!" என்று கூறினாள். உடனே வாயே ராணி பழைய உருவத்தை அடைந்தான். பிறகு கிழவி ஒரு சீட்டி யடித்தாள். உடனே ஒரு பெரிய ராக்ஷஸன் தோன்றி ஒரு தோளில் முழுமதியையும் மற்றொரு தோளில் ராணியையும் கிழவியையும் சுமந்துகொண்டு லாயே ராணியின் மாய நகரத்தை அடைந்தான்.

தனது நாட்டுக்குத் திரும்பியவுடன் லாயே ராணி முழுமதியைக் கண்டு அடங்காத கோபம் கொண்டாள். உடனே அவன் முகத்தில் நீர் தெளித்து, உரத்த குரலில் "உன் மனித உருவத்தை விட்டு ஆந்தையாக மாறக் கடவாய்" என்று சபித்தாள்.

ஒரு நிமிஷத்தில் முழுமதி ஆந்தையாக மாறி விட்டான். உடனே தன் வேலையாட்களில் ஒருவனைக் கூப்பிட்டு "இந்த ஆந்தையை ஒரு கூட்டில் போட்டு அடைத்து விடு. அதற்கு உணவு, தண்ணீர் ஒன்றும் கொடுக்காதே" என்று கட்டளை யிட்டு விட்டாள்.

ஆனால், அந்த வேலைக்காரன் முழுமதியிடம் பரிதாபம் கொண்டான். ஆந்தைக்கு உணவும் தண்ணீரும் கொடுத்தான். அவன் மந்திரவாதி அப்துல்லாவின் சிநேகிதன். ஆகையால் முழுமதியின் பரிதாப நிலையை அவனுக்குத் தெரிவித்தான். அப்துல்லா கைதேர்ந்த மந்திரவாதியாயிற்றே! மந்திரம் ஜெபித்து நான்கு இறக்கைகள் உள்ள ஒரு ராக்ஷஸனை வரவழைத்தான். இந்த ராக்ஷஸன் பெயர் **மின்னல்**. இந்த ராக்ஷஸன் தோன்றியவுடன், "நீ உடனே போய் முழுமதியின் காவலாளைப் பாரசீகத்துக்குத் தூக்கிச் சென்று முழுமதியின் தாயான கடலழகியினிடம் விட்டு விடு. லாயே ராணியின் மந்திர சக்தியில் கட்டுண்டு முழுமதி அவதிப்படும் பரிதாபநிலையை அவன் அவளுக்குத் தெரிவிப்பான்!" என்று சொல்லி அனுப்பினான்.

**மின்னல்** எனப் பெயர் கொண்ட அந்த நான்கு இறக்கை ராக்ஷஸன் உடனே பறந்து சென்று லாயே ராணியின் அரண்மனையில் குதித்தான். அங்கு இருந்த முழுமதியின் காவலாளைத் தன் தோள் மீது ஏற்றிக் கொண்டு, அவனிடம் மந்திரவாதி அப்துல்லா சொன்ன சேதியைச் சொன்னான். சில நிமிஷங்களில் அரக்கனும் காவலாளும் முழுமதியின் தாயான கடலழகி முன்பு வந்து நின்றனர்.



கடலழகியும் அவன் தாய் பரோஷா ராணியும் மிகவும் வருத்தத்துடன் பேசிக் கொண்டிருந்ததை அவர்கள் கண்டனர். முழுமதிக்கு நேர்ந்த கதியைக் காவலாளி சுருக்கமாகக் கூறினான். உடனே இதற்கு ஏதாவது ஏற்பாடு செய்ய வேண்டுமென்று அவர்களிடம் கூறினான்.

முழுமதி கஷ்டப் பட்டாலும் உயிருடனிருக்கிறான் என்பதைக் கேட்டு இரண்டு ராணிகளும் மகிழ்ச்சி யடைந்தனர். உடனே அவனை மீட்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளை அவர்கள் செய்ய ஆரம்பித்தனர்.

முழுமதியின் மாமனான சலீப் மன்னனை வரவழைத்தனர். அவன் தன்னுடைய முரட்டுக் கடல் மனிதர்கள் அடங்கிய ஒரு படையையும், அவர்களுக்கு உதவிபுரியும் அரக்கர் கூட்டத்தையும் திரட்டிக் கொண்டு வந்து சேர்ந்தான்,

படை சேர்ந்தவுடன் சலீப் சேனாதிபதியாக இருந்து போர் தொடங்கினான். சலீப் மன்னன், அவன் படையினர், அவன் தாய் பரோஷா ராணி, தங்கை கடலழகி, அவர்கள் பரிவாரங்களுடன் மேலே பறந்து லாயே ராணியின் மாய நகரத்தில் குதித்தனர். ஒரு க்ஷணப்பொழுதில் மந்திர ராணி லாயேயும் மாயக்காரியான அவள் தாயும் அவர்களுடைய கொடிய பரிவாரங்களும் அழிந்துபோயினர்.

பிறகு கடலழகி தன் மகன் பட்சி உருவத்தில் அடைக்கப்பட்டிருந்த கூண்டைக் கொண்டு வரும்படி உத்தர விட்டாள். கூண்டை வேலையாட்கள் கொண்டு வந்ததும், அதைத் திறந்து அதனுள்ளிருந்த ஆந்தையின் மீது சிறிது ஜலம் தெளித்து "என் அருமை மகனே! இந்த ஆபாச உருவத்தை விட்டு உன் சுய ரூபத்தை அடைவாயாக!" என்று கூறினாள்.

ரா. நா

கண் மூடிக் கண் திறப்பதற்குள் ஆந்தை மறைந்து முழுமதி தன் முழு அழகுடன் தோன்றினான். உடனே தன் தாயையும் பாட்டியையும் மாமனையும் கட்டித் தழுவி அளவற்ற ஆனந்த மடைந்தான்.

தன் மகனை மறுபடியும் அடைந்த சந்தோஷம் அடங்கிய பிறகு, கடலழகி மந்திரவாதி அப்துல்லாவை அழைத்து வரச் சொன்னாள். லாயே ராணியின் மாய மந்திரங்களிலிருந்து முழுமதியைக் காப்பாற்றியது கிழவன் அப்துல்லா அல்லவா? அவனுக்கு நன்றி செலுத்தி விட்டு அவன் செய்த உதவிக்கு என்ன வெகுமதி வேண்டும் என்று கேட்டாள்.



"மன்னன் முழுமதிக்குக் காவலாயிருந்து அவனுக்குச் சேவை செய்வதைத் தவிர வேறு வெகுமதி எதுவும் எனக்கு வேண்டாம்" என்று சொல்லி விட்டான் அவன். அவன் அப்படிச் சொன்ன போதிலும், கடலழகி அவனுக்கு ஏராளமான பணமும் நிலமும் வெகுமதிகளும் கொடுத்தாள். அப்துல்லா மிக்க மகிழ்ச்சியடைந்தான்.

பிறகு மந்திரத்தின் மூலம் சலீப் மன்னன் சமாண்டல் அரசனைத் தன் முன் வரவழைத்தான்.

சமாண்டல் அரசன் இது வரையில் கைதியா யிருந்தாலும் சலிப் மன்னனால் மிகவும் மரியாதையுடன் பாதுகாக்கப்பட்டு வந்தான். சமாண்டல் அரசன் தோன்றியதும் முழுமதி அவன் காலில் விழுந்து, அவனுடைய மகளைத் தனக்கு மணம் செய்து வைக்கும்படி கேட்டுக் கொண்டான்.



இது வரையில் பட்ட கஷ்டத்தினால் சமாண்டல் அரசனின் கர்வம் அடங்கி விட்டது. ஆகையால் தன் மகள் இனிமொழியாளை முழுமதிக்குக் கலியாணம் செய்து கொடுக்கச் சம்மதித்தான். உடனே தன் காவலாட்களைக் கூப்பிட்டுத் தன் மகளைத் தேடி அழைத்து வரும்படிக் கட்டளையிட்டான். இனிமொழியாள் கடைசியாகப் பாரசீக மன்னன் விட்டுச் சென்ற தீவில் இருந்தாள். சமாண்டல் அரசனின் காவலாட்கள் அவளை மன்னன் முன் கொண்டு வந்தனர்.

பாரசீக மன்னனான முழுமதியை அவள் கல்யாணம் செய்து கொள்வதில் தனக்குப் பூரண சம்மதம் என்று சமாண்டல் அரசன் தன் மகளிடம் தெரிவித்துவிட்டு "உன்னுடைய அபிப்பிராயம் என்ன, அம்மா? நீ முழுமதியைக் கல்யாணம் செய்து கொள்கிறாயா?" என்று கேட்டான்.

இனிமொழியாள் வெட்கத்துடன் தலை குனிந்தாள். சமாண்டல் அரசன் அவளைப் பார்த்து, "இதில் வெட்கப்படுவதற்கு என்ன இருக்கிறது, அம்மா? சொல்" என்றான்.

இனிமொழியாள் சொன்னாள்: "அப்பா, அவரை முதல் முதலாகப் பார்த்ததிலிருந்தே அவரைக் கல்யாணம் செய்து கொள்வதென்று முடிவு செய்து விட்டேன். ஆனால் அவர் மூலம் தங்களுக்குப் பல கஷ்டங்கள் ஏற்பட்டதால், அவரைப் பழிக்குப் பழி வாங்குவதென்று முடிவு செய்து நானும் அவருக்குப் பல கஷ்டங்கள் விளைவித்தேன். தங்களுக்காக என் காதலைக் கூடத் துறந்தேன். ஆனால், இப்போது எல்லாம் சந்தோஷமாக முடிந்து விட்டது. இனி நான் அவரைக் கல்யாணம் செய்து கொள்ளத் தடை இல்லை" என்றாள்.

இதைக் கேட்டு சமாண்டல் அரசன் மிக்க மகிழ்ச்சியடைந்தான். தன்

## ஓடாத வண்டி!



அம்பிப்பயல் பொம்மை வண்டியில் வீட்டுக்கு வருவதாகச் சொன்னான். ஆனால், வண்டி ஓடவில்லை! கடைசியில் அவனை மாத்திரமா, அவன் வண்டியையும் குதிரையையும்கூட வேறொரு வண்டியில்தான் கொண்டுபோக வேண்டியதாயிற்று!

மகன் முழுமதியைத்தான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று அவனுக்கும் மனதிற்குள்ளாக ஆசையாக இருந்தது. அது இப்போது பூர்த்தியடைந்துவிட்டது.

முழுமதிக்கும் கிளிமொழியாளுக்கும் மாய நகரத்தில் சிறப்பாக விவாகம் நடந்தது. எங்கும் ஒரே கோலாகலமாக இருந்தது. மக்கள் யாவரும் குதூகலமாக விவாக விமரிசையில் கலந்து கொண்டனர். மந்திரவாதியான ராணி லாயே கொல்லப் பட்டு விட்டதால், அவனால் மிருகங்களாகவும் பட்சிகளாகவும் மாற்றப்பட்டவர்கள் மனித உருவம் பெற்றுக் கல்யாண வைபவத்தில் கலந்து கொண்டனர். இவர்கள் யாவரும் ராஜ குலத்திலோ, பிரபுக்கள் குடியிலோ பிறந்து ராணி லாயேயினால் கஷ்டமடைந்தவர்கள் என்று தெரிந்தது.

திருமண வைபவங்கள் முடிந்தன. உடனே சவீப் மன்னன் தனது கடல் ராஜ்யத்திற்குச் சென்றான். சமாண்டல் அரசன் மீண்டும் தனது ராஜ்யத்தைச் சவீப் மன்னனிடமிருந்து பெற்றுக் கொண்டான். கிளிமொழியாளுடன் மன்னன் முழுமதி பாரசீக நாட்டிற்குச் சென்றான். மறைந்து போன தங்கள் ஆசை மன்னன் திரும்பியது கண்டு பாரசீக மக்கள் ஆனந்தக் கடலில் மூழ்கினர்.

## எத்தனை வட்டங்கள் ?



இந்தப் படத்தில் எத்தனை வட்டங்கள் இருக்கின்றன?

விடை அடுத்த இதழில்.

சென்ற வாரத்தில் வெளியான புதிருக்கு விடை : 59.

# கதவின் சூட்சுமம்

**தா**மஸ் ஆல்வா எடிஸன் புகழ் பெற்ற விஞ்ஞானிகளில் ஒருவர். ஒரு முறை சில நண்பர்கள் அவரைப் பார்க்க அவருடைய வீட்டுக்கு வந்தார்கள். எடிஸன் தாம் கண்டுபிடித்த விஞ்ஞானப் புதுமைகளை அவர்களுக்குக் காட்டினார். எல்லோரும் அவற்றைப் பார்த்து ஆச்சரியப்பட்டார்கள்.

வெகு நேரம் பேசிக் கொண்டிருந்த பிறகு அவர்கள் புறப்பட்டார்கள். அவர்களை வழியனுப்புவதற்காக எடிஸன் வாசலுக்கு வந்தார்.

வாசலில் ஒரு சுழல் கதவு இருந்தது. அதைத் தள்ளிவிட்டுத்தான் உள்ளே வரவோ, வெளியே போகவோ முடியும். பழக்கம் இல்லாதவர்களுக்கு அது கொஞ்சம் சிரமமாகத்தான் இருக்கும். நண்பர்களில் ஒருவர் எடிஸனுக்கு அதைச் சுட்டிக் காட்டி, "இந்தக் கதவை என்னத்துக்காக வைத்திருக்கிறீர்கள்? இதைத் தள்ளிக் கொண்டு உள்ளே வருவதற்குள் பாதி உயிரே போய் விடும்போல் இருக்கிறதே!" என்றார்.

எடிஸன் சிரித்துக் கொண்டே, "அப்படியா, அதில் ஒரு முக்கியமான சூட்சுமம் இருக்கிறது" என்றார்.



"என்ன சூட்சுமம்?" என்று கேட்டார்கள் நண்பர்கள்.

"இந்தக் கதவை ஒரு தடவை சுற்றினால், அதனுடன் பிணைக்கப் பட்டிருக்கும் விசை என் தோட்டத்துத் தொட்டியில் நான்கு குடம் தண்ணீரைக் கொட்டிவிடும்!" என்றார் எடிஸன்.




# மோகினித் தீவு

## இரண்டாம் அத்தியாயம்

அந்த ஸ்திரீ புருஷர்கள் சதிபதிகளாய்த்தான் இருக்க வேண்டும்; அல்லது கலியாண மாகாத காதலர்களாகவும் இருக்கலாம். அவர்கள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டபோது அவர்களுடைய கண்களில் கரைகாணாத காதல் வெள்ளம் பொங்கியது.

அந்த யுவன் பேசிய மொழியிலிருந்து அவர்கள் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள் என்றும் ஊகிக்கவேண்டியிருந்தது. ஆனால் அவர்கள் இங்கே எப்போது வந்தார்கள்? நான் வந்த கப்பலில் இவர்கள் வரவில்லை யென்பது நிச்சயம். பின்னர், எப்படி வந்திருப்பார்கள்? இம்மாதிரி நாட்டிய மாடும் தம்பதிகளைப் போல் இவர்கள் விசித்திரமான ஆடை ஆபரணங்களைத் தரித்திருப்பதின் காரணம் என்ன? ஏதாவது ஒரு நடன கோஷ்டியில் இவர்கள் சேர்ந்தவர்களா யிருந்து, ஒருவரோடொருவர் தகுதியில்லாத காதல் கொண்டு உலக அபவாதத்துக்கு அஞ்சி இவ்விடம் ஓடிவந்திருப்பார்களோ? இன்னொரு யோசனையும் என் மனதில் உதயமாயிற்று. ஒரு வேளை சினிமாப் படம் பிடிக்கும் கோஷ்டியைச் சேர்ந்தவர்கள் யாராவது இந்தப் பழைய பாழடைந்த சிற்பக் காட்சிகளுக்கு மத்தியில் படம் பிடிப்பதற்காக வந்திருப்பார்களோ? அப்படியானால், கப்பலோ, படகோ, இத்தீவை யொட்டி நிற்க வேண்டுமே? அப்படி யொன்றும் நாம் பார்க்கவில்லையே? ... இவ்விதம் மனதிற்குள் பற்பல எண்ணங்கள் மின்னல் வேகத்தில் தோன்றி மறைந்தன.

நான் மௌனம் சாதித்தது அந்த இளைஞனுக்குக் கொஞ்சம் வியப்பளித்திருக்க வேண்டும். இன்னொரு தடவை என்னை உற்றுப் பார்த்து விட்டு,




"தங்களுடைய முகத்தைப் பார்த்தால் தமிழர் என்று தோன்றுகிறது. என் ஊகம் உண்மைதானா?" என்றான்.

அதற்கு மேல் நான் பேசாமலிருப்பதற்கு நியாயம் ஒன்றுமில்லை. பேசும் சக்தியையும் இதற்குள்ளே என் நா பெற்றுவிட்டது.

"ஆம்; ஐயா! நான் தமிழன்தான். நீங்களும் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள் என்று காணப்படுகிறது! அப்படித்தானே?" என்றேன்.

"ஆம்; நாங்களும் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்களே. ஆனால் நாங்கள் தமிழ்நாட்டைப் பற்றிய செய்தி கேட்டு வெகுகாலம் ஆயிற்று. ஆகையால் தங்களைப் பார்த்ததில் இரட்டிப்பு மகிழ்ச்சி அடைகிறேன்."

"நீங்கள் எப்போது இந்தத் தீவுக்கு வந்தீர்களோ?"

"நாங்கள் வந்து எத்தனையோ காலம் ஆயிற்று. ஒரு யுகம் மாதிரி தோன்றுகிறது. ஒரு நிமிஷம் என்றும் தோன்றுகிறது. தாங்கள் இன்றைக்குத்தான் வந்தீர்கள்போலிருக்கிறது. அதோ தெரிகிறதே, அந்தக் கப்பலில் வந்தீர்களோ? அடே அப்பா! எத்தனை பெரிய கப்பல்!"

"ஆம், அந்தக் கப்பலிலேதான் வந்தேன். ஆனால் இந்தக் கப்பலை அவ்வளவு பெரிய கப்பல் என்று நான் சொல்ல மாட்டேன்......"

"அழகாய்த்தானிருக்கிறது. இது பெரிய கப்பல் இல்லையென்று சொன்னால் எப்படி நம்புவது? எனக்குத் தெரியும்; தமிழர்கள் எப்போதும் தாங்கள் செய்யும் காரியத்தைக் குறைத்துச் சொல்வது வழக்கம்......"

அந்தக் கப்பல் அப்படியொன்றும் தமிழர்கள் சாதித்த காரியம் அல்லவென்றும், யாரோ வெள்ளைக்காரர்கள் செய்து அனுப்பியது என்றும் சொல்ல விரும்பினேன். ஆனால் அந்த யுவன் அதற்கு இடம் கொடுக்கவில்லை.

"இந்தக் கப்பல் எங்கேயிருந்து புறப்பட்டது? எங்கே போகிறது? இதில் யார் யார் இருக்கிறார்கள்? இங்கே எத்தனை காலம் தங்கியிருக்க உத்தேசம்?" என்று மளமளவென்று கேள்விகளைப் பொழிந்தான்.

"பர்மாவிலிருந்து தமிழ் நாட்டுக்குப் போகிற கப்பல் இது. சுமார் ஆயிரம் பேர் இதில் இருக்கிறார்கள். யுத்தம் பர்மாவை நெருங்கி வந்துகொண்டிருக்கிறது அல்லவா? அதனால் பர்மாவிலிருந்த தமிழர்கள் எல்லாரும் திரும்பித் தமிழ் நாட்டுக்குப் போய்க்கொண்டிருக்கிறார்கள்......"

"என்ன? பர்மாவை நெருங்கி யுத்தம் வந்தால் அதற்காகத் தமிழர்கள் பர்மாவிலிருந்து திரும்புவானேன்? தமிழ் நாட்டின் நிலை இப்போது அப்படி ஆகிவிட்டதா, என்ன? யுத்தத்தைக் கண்டு தமிழர்கள் பயப்படும் காலம் வந்துவிட்டதா?"

அந்த யௌவன புருஷனின் கேள்வி என்னைக் கொஞ்சம் திகைக்க வைத்துவிட்டது. என்ன பதில் சொல்வது என்று யோசிப்பதற்குள் இத்தனை நேரமும் மௌனமாயிருந்த அந்த நங்கை குறுக்கிட்டு வீணா கானத்தையும் விட இனிமையான குரலில், "அப்படியானால் தமிழ் நாட்டவர் புத்திசாலிகளாகி விட்டார்கள் என்று சொல்ல

வேண்டும். யுத்தம் என்ற பெயரால் ஒருவரை யொருவர் கொன்று மடிவதில் என்ன பெருமை இருக்கிறது? அல்லது அதில் சந்தோஷந்தான் என்ன இருக்க முடியும்?'' என்றாள்.

அந்த யுவன் புன்னகை பொங்கிய முகத்தோடும் அன்பு ததும்பிய கண்களோடும் தன் காதலியைப் பார்த்து, "ஓகோ! உன்னுடைய விதண்டாவாதத்தை அதற்குள்ளே தொடங்கி விட்டாயா?'' என்றான்.

"சரி, நான் பேசுவது உங்களுக்குப் பிடிக்கவில்லை யானால் வாயை மூடிக் கொண்டிருக்கிறேன்'' என்று சொன்னாள் அந்தப் பெண்.

"என் கண்மணி! உன் பேச்சு எனக்குப் பிடிக்காமற் போகுமா? உன் பவழ வாயிலிருந்து வரும் அமுத மொழிகளைப் பருகியே யல்லவா நான் இத்தனை காலமும் காலட்சேபம் நடத்தி வருகிறேன்?'' என்று அந்த யுவன் கூறிய சொற்கள் உண்மை உள்ளத்திலிருந்து வந்தவை என்பது நன்கு தெரிந்தது. ஆனால் இவர்கள் என்ன இப்படி நாடக பாத்திரங்கள் பேசுவதைப் போலப் பேசுகிறார்கள்? இவர்கள் யாரா யிருக்கும்?—இதை அறிந்து கொள்ளுவதற்கு என்னுடைய ஆர்வம் வளர்ந்தது.

"நீங்கள் யார், இங்கே எப்போது வந்தீர்கள் என்று இன்னும் நீங்கள் சொல்லவில்லையே?'' என்றேன்.

"அது பெரிய கதை!'' என்றான் அந்த இளைஞன்.

"பெரிய கதையா யிருந்தால் இருக்கட்டுமே! எனக்கு வேண்டிய அவகாசம் இருக்கிறது. இனிமேல் நாளைக் காலையிலேதான் கப்பலுக்குப் போக வேண்டும். இராத்திரியில் எனக்குச் சீக்கிரம் தூக்கம் வராது. உங்களுடைய கதையை விவரமாகச் சொல்லுங்கள், கேட்கிறேன். அதைக் காட்டிலும் எனக்குச் சந்தோஷமளிப்பது வேறொன்று மில்லை.''

அந்த நங்கை குறுக்கிட்டு, "அவர்தான் கேட்கிறார், சொல்லுங்களேன்! நமக்கும் ஒரு இரவு பொழுது போனதாகும். இந்த மோகன வெண்ணிலவை ஏன் வீணாக்க வேண்டும்? எல்லாரும் இந்தப் பாறையில் உட்கார்ந்து கொள்ளலாம். உட்கார்ந்த






படி கதை சொல்லுவதும் கதை கேட்பதும் சௌகரியமல்லவா?" என்றாள்.

"எல்லாம் சௌகரியந்தான். ஆனால் நீ என்னைக் கதை சொல்லும்படி விட்டால்தானே? இடையிடையே நீ குறுக்கிட்டுச் சொல்ல ஆரம்பித்து விடுவாய்......"

"ஒன்றும் குறுக்கிட மாட்டேன். நீங்கள் ஏதாவது ஞாபக மறதியாக விட்டு விட்டால் மறந்ததை எடுத்துக் கொடுப்பேன். அதுகூட ஒரு பிசகா?" என்றாள் அந்தப் பெண்.

"பிசகா? ஒரு நாளும் இல்லை. உன்னுடைய காரியத்தைப் பிசகு என்று சொல்வதற்கு நான் என்ன பிரம்மதேவரிடம் வரம் வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேனா? நீ எது செய்தாலும் அதுதான் சரி. இருந்தாலும் அடிக்கடி குறுக்கிட்டுப் பேசாமல் என் போக்கில் கதை சொல்ல விட்டாயானால் நன்றாயிருக்கும்."

இப்படிச் சொல்லிக்கொண்டே அந்த யுவன் பாறையில் உட்கார, யுவதியும் அவன் அருகில் உட்கார்ந்து, அவனுடைய ஒரு தோளின்மேல் தன்னுடைய கை ஒன்றைப் போட்டுக் கொண்டாள். அந்தச் சிறு செயலில் அவர்களுடைய அன்யோன்ய தாம்பத்ய வாழ்க்கையின் பெருமை முழுதும் நன்கு வெளியாயிற்று.

அவர்களுக்கு அருகிலே நானும் உட்கார்ந்தேன். ஏதோ ஒரு அதிசயமான அபூர்வமான வரலாற்றைக் கேட்கப் போகிறோம் என்ற எண்ணத்தினால் என் உள்ளம் பரபரப்பை அடைந்திருந்தது. கடல் ஓடையில் காத்திருந்த கப்பலையும் அதற்குவந்த அபாயத்தையும் பர்மா யுத்தத்தையும் அதிலிருந்து தப்பி வந்ததையும் அடியோடு மறந்து விட்டேன். அழகே உருக்கொண்ட இந்தக் காதலர்களின் கதையைக் கேட்க அளவிலாத ஆவல் கொண்டேன்.

காற்று முன்னைக்காட்டிலும் கொஞ்சம் வேகத்தை அடைந்து 'விர்' என்று வீசிற்று. தீவிலிருந்த மரங்களெல்லாம் அசைந்தபடி 'மர்மர' சப்தத்தை உண்டாக்கின. இப்போது கடலிலும் கொஞ்சம் ஆரவாரம் அதிகமாயிருந்தது. கடல் அலைகளின் குமுறல் தூரத்தில் எங்கேயோ சிம்மம் கர்ஜனை செய்வது போன்ற ஓசையை எழுப்பியது.

## மூன்றாம் அத்தியாயம்

அந்தச் சுந்தர யௌவன புருஷன் சொல்லத் தொடங்கினான் :—

"முன்னொரு சமயம் உம்மைப் போலவே சில மனிதர்கள் இங்கே திசை தவறி வந்துவிட்ட கப்பலில் வந்திருந்தார்கள். அவர்களிடம் என்னுடைய கதையைத் தொடங்கியபோது 'எழுநூறு ஆண்டுகளுக்கு முன்னால்' என்று ஆரம்பித்தேன். அவர்கள் எதனாலோ மிரண்டு போய் ஓட்டம் எடுத்




தார்கள். அப்படி நீர் ஓடி விடமாட்டீர் என்று நம்புகிறேன். அந்த மனிதர்களைப் போலன்றி நீர் ரஸிகத் தன்மையுள்ளவர் என்று நன்றாய்த் தெரிகிறது. என்னுடன் பேசிக் கொண்டிருக்கும் போதே உம்முடைய கண்கள் என் வாழ்க்கைத் துணைவியின் முகத்தை அடிக்கடி நோக்குவதிலிருந்து உம்முடைய ரஸிகத் தன்மையை அறிந்து கொண்டேன்...''

இதைக் கேட்டதும் நான் வெட்கித் தலை குனிந்தேன். அந்த மனிதனிடம் ஏதோ ஒரு அதிசய சக்தி இருக்க வேண்டும். என் அந்தரங்க எண்ணத்தை அவன் தெரிந்து கொண்டு விட்டான். அவன் நான் ஓடிப்போக மாட்டேன் என்று நம்புவதாகச் சொன்னபோது என் மனதிற்குள் 'நானாவது? ஓடுவதாவது? புது மலரைவிட்டுப் பெண் வண்டு ஓடுவதுண்டா? ரதியை நிகர்த்த இந்த அழகியின் முகம் என்னை ஓடிப் போவதற்கு விடுமா?' என்று நான் எண்ணியது உண்மைதான். அந்தச் சமயத்தில் என்னையறியாமல் என் கண்கள் அந்தப் பெண்ணின் முகத்தை நோக்கியிருக்க வேண்டும். அதைக் கவனித்து விட்டான் அந்த இளைஞன். இனி அத்தகைய தவறைச் செய்யக் கூடாது என்று மனதிற்குள் தீர்மானித்துக் கொண்டேன்.

அந்த யுவன் தொடர்ந்து கூறினான்:- "நீர் வெட்கப் படவும் வேண்டாம்; பயப் படவும் வேண்டாம். உம் பேரில் தவறு ஒன்றுமில்லை. இவளை இப்படிப் பட்ட அழகியாகப் படைத்து விட்ட பிரம்மதேவன் பேரி

லேதான் தவறு. இவன் காரணமாக நான் எத்தனை தவறுகள் செய்திருக்கிறேன் என்பதை நினைத்துப் பார்த்தால்...சரி, சரி! அதையெல்லாம் பற்றிச்சொன்னால் இவனுக்குக் கோபம் பொங்கிக் கொண்டு வந்து விடும். கதைக்குத் திரும்பி வருகிறேன். எழுநூறு வருஷத்துக்கு முன்னால் தஞ்சாவூரில் உத்தம சோழர் என்னும் மன்னர் அரசு புரிந்து வந்தார். அப்போது சோழ ராஜ்யம் அவ்வளவு விசாலமான ராஜ்யமாக இல்லை. ராஜ ராஜ சோழன் காலத்திலும் ராஜேந்திர சோழன் காலத்திலும் இலங்கை முதல் விந்திய மலை வரையில் பரவியிருந்த சோழ ராஜ்யம் அப்போது குறுகிச் சிறுத்துத் தஞ்சாவூரைச் சுற்றிச் சில காத தூரத்துக்குள் அடங்கிப்போயிருந்தது. ஆனாலும் உத்தம சோழர் தம்முடைய குலத்தின் பழைய பெருமையை மறக்கவே யில்லை. அந்தப் பெருமைக்குப் பங்கம் விளைவிக்கக் கூடிய காரியம் எதையும் செய்யவிரும்பவில்லை. உத்தம சோழருக்கு இரண்டு புதல்வர்கள் இருந்தார்கள். அவர்களில் ஒருவன் பெயர் சுகுமாரன்; இன்னொருவன் பெயர் ஆதித்தன். மூத்தவனாகிய சுகுமாரன் பட்டத்து இளவரசனாக விளங்கினான்.

அதேசமயத்தில் மதுரையில் பராக்கிரம பாண்டியர் என்னும் அரசர் ஆட்சிபுரிந்து வந்தார். ஆனால் இவர் புராதனமான பாண்டிய வம்சத்தைச் சேர்ந்தவர் அல்ல; தென் பாண்டிய நாட்டைச் சேர்ந்த பாளையக்காரர். தம்முடைய போர்த் திறமையினால் மதுரையைக் கைப்பற்றிப் பராக்கிரம பாண்டியர் என்று பட்டமும் சூட்டிக் கொண்டிருந்தார். அவருக்கு ஆண் சந்ததி கிடையாது. ஒரே ஒரு அருமைப் புதல்வி இருந்தாள். அவள் பெயர் புவனமோகினி. அந்த ராஜகுமாரியின், அழகு, குணம், அறிவுத்திறன் முதலியவற்றைக் குறித்து நான் இப்போது அதிகமாக ஒன்றும் சொல்லப் போவதில்லை. சொல்லுவது சாத்தியமும் இல்லை. அப்படிச் சொன்னாலும் இதோ இவன் குறுக்கிட்டுத் தடுத்து விடுவான்...!"

இவ்விதம் கூறிவிட்டு அந்த யுவன் தன் காதலியின் அழகு ஒழுகும் முகத்தைக் கடைக் கண்ணால் பார்த்தான். அவளுடைய செவ்விதழ்கள் குமுத மலரின் இதழ்கள் விரிவதுபோல் சிறிது விரிந்து, உள்ளேயிருந்த முல்லைப் பல் வரிசை தெரியும்படி செய்தன.

பின்னர் இளைஞன் கதையைத் தொடர்ந்து சொன்னான்:—

"பராக்கிரம பாண்டியர் குமரிமுனையிலிருந்து திரிசிராப்பள்ளி வரையில் வியாபித்திருந்த பெரிய ராஜ்யத்தை ஆண்டார். ஆயினும் அவருடைய மனதில் நிம்மதி இல்லை. பழமையான ராஜ குலத்துடன் கலியாண சம்பந்தம் செய்து கொள்ள வேண்டுமென்ற ஆசை அவருக்கு உண்டாகியிருந்தது.

ஒரு சமயம் பராக்கிரம பாண்டியர் தஞ்சாவூருக்கு வந்திருந்தார். உத்தம சோழரின் அரண்மனையில் விருந்தாளியாகத் தங்கியிருந்தார். அவருக்குச் சகல விதமான ராஜோபசாரங்களும் நடந்தன. உத்தம சோழரின் மூத்த புதல்வன் சுகுமாரனை அவர் பார்க்க நேர்ந்தது. அவனிடம் எத்தகைய குணாதிசயங்களை அவர் கண்டாரோ எனக்குத் தெரியாது......"

இந்தச் சமயத்தில் அந்த யுவதி குறுக்கிட்டு, "உங்களுக்குத் தெரியாவிட்டால் எனக்குத் தெரியும். நான் சொல்லுகிறேன்!" என்றாள்.

"கண்மணி! கொஞ்சம் பொறுத்துக் கொள். கதையில் நீ சொல்ல வேண்டிய இடம் வரும்போது சொல்லலாம்" என்று கூறிவிட்டு, மீண்டும் என்னைப் பார்த்துச் சொன்னான்:—

"சோழ ராஜகுமாரனிடம் பராக்கிரம பாண்டியர் என்னத்தைக் கண்டாரோ, தெரியாது. அவனுக்குத் தம் அருமைப் புதல்வி புவன மோகினியைக் கலியாணம் செய்து கொடுத்துவிட வேண்டும் என்ற ஆசை அவர் மனதில் உதயமாகிவிட்டது. பழமையான பெரிய குலத்தில் சம்பந்தம் செய்து கொள்ள வேண்டும் என்ற அவருடைய மனோரதம் அதனால் நிறைவேறுவதாயிருந்தது. ஆகவே உத்தம சோழரின் உத்தியானவனத்தில் ஒரு நாள் உல்லாசமாகப் பேசிக்கொண்டிருந்த போது பராக்கிரம பாண்டியர் தம்முடைய கருத்தை வெளியிட்டார்.

அந்த நேரத்தில் உத்தம சோழரின் நாவில் சனீசுவரன் குடிபுகுந்திருக்க வேண்டும். அப்பேர்ப்பட்ட நளமகா

ராஜாவைப் படாதபாடு படுத்தி வைத்த சனீசுவரன் உத்தம சோழரைச் சும்மா விட்டு விடுவானா? அவர் ஏதோ வேடிக்கைப் பேச்சு என்று நினைத்துச் சொல்லத் தகாத ஒரு வார்த்தையைச் சொல்லிவிட்டார். 'கரிகால சோழனும் ராஜ ராஜ சோழனும் பிறந்து புகழ் வீசிய வம்சத்தில் என் புதல்வன் சுகுமாரன் பிறந்தவன். நீரோ தாயும் தகப்பனும் யார் என்று அறியாதவர். ஏதோ ஒரு குருட்டு அதிர்ஷ்டத்தினால் மதுரை ராஜ்யத்தைக் கைப்பற்றி ஆள்கிறீர். அப்படியிருக்க உம்முடைய பெண்ணை என்னுடைய குமாரனுக்கு எப்படி விவாகம் செய்து கொள்ள முடியும்? உம்முடைய குமாரி இந்த அரண்மனைக்கு வரவேண்டும் என்று விரும்பினால் குற்றேவல் செய்யும் பணிப் பெண்ணாகத்தான் வர முடியும். வேறு மார்க்கம் ஒன்றுமில்லை. உம்முடைய புதல்வியைப் பணிப் பெண்ணாக அனுப்ப உமக்குச் சம்மதமா?' என்றார்.

உத்தம சோழர் சாதாரணமாகப் பிறர் மனம் புண்படும்படி பேசக் கூடியவர் அல்ல! அவருக்குத் தம் குலத்தைப் பற்றிய வீண் கர்வமும் கிடையாது. போதாத காலம், அப்படி விளையாட்டாகச் சொல்லிவிட்டார். பராக்கிரம பாண்டியர் அதைக் கேட்டுச் சிரித்து விட்டிருந்தால் எல்லாம் சரியாய்ப் போயிருக்கும். ஆனால் பராக்கிரம பாண்டியர் எத்தனையோ அரிய ஆற்றல்கள் படைத்தவராயினும் அவருக்குச் சிரிக்க மட்டும் தெரியாது. உத்தம சோழரின் வார்த்தைகளைக் கேட்டதும் அவருக்கு வந்து விட்டது ரௌத்ராகாரமான கோபம். 'அப்படியா சொன்னீர்? இனி இந்த அரண்மனையில் ஒரு வினாடியும் தாமதியேன். ஒரு சொட்டுத் தண்ணீரும் அருந்தேன்!' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டார். உத்தம சோழர் எவ்வளவோ சமாதானம் சொல்லியும் கேட்கவில்லை. போனவர் சில நாளைக்கெல்லாம் பெரும் படையுடன் திரும்பி வந்தார். உத்தம சோழர் இதை எதிர்பார்க்கவே யில்லை. சோழ ராஜ்யத்தில் அப்போது பெரிய சைன்யமும் இல்லை. ஆகையால் பராக்கிரம பாண்டியரின் நோக்கம் எளிதில் நிறைவேறியது. தஞ்சாவூரைக் கைப்பற்றி உத்தம சோழரையும் சிறைப் பிடித்தார். இளவரசர்களைத் தேடித் தேடிப் பார்த்தும் அவர்கள் அகப்படவில்லை. தகப்பனார் சொற்படி அவர்கள் முன்னாலேயே தஞ்சாவூரை விட்டு வெளிக்கிளம்பிக் கொல்லிமலைக் காட்டுக்குத் தப்பித்துக் கொண்டுபோய் விட்டார்கள். இதற்காகப் பிற்பாடு அவர்கள் எவ்வளவோ வருத்தப்பட்டார்கள். பின்னால் வருத்தப்பட்டு என்ன பயன்? பராக்கிரம பாண்டியர் தம்முடைய கோபத்தை யெல்லாம் உத்தம சோழர்மீது பிரயோகித்தார். அவர் செய்த காரியத்தைச் சொல்லவும் என் நாக்குக் கூசுகிறது......''

''அப்படியானால் நீங்கள் சற்றுச் சும்மா யிருங்கள். மேலே நடந்ததை நான் சொல்லுகிறேன்!'' என்று ஆரம்பித்தாள் அந்த யுவதி. பிறகு என்னைப் பார்த்துச் சொல்லத் தொடங்கினாள். அவளுடைய செந்தாமரை முகத்தையும் கருவண்டை நிகர்த்த கண்களையும் பார்த்தபோது ஏற்பட்ட மயக்கத்தினால் சில சமயம் அவள் சொல்லிய வார்த்தைகள் என் காதில் ஏறவில்லை. எனினும் ஒருவாறு கதைத் தொடர்ச்சியை விடாமல் கவனித்து வந்தேன். அந்த மங்கை கூறினாள்:—

''பராக்கிரம பாண்டியருக்கு ஏற்கெனவே உத்தம சோழர்மீது கோபம் அதிகமா யிருந்தது. 'உங்களுடைய குமாரியை என் வீட்டுப் பணிப் பெண்ணாக அனுப்புங்கள்' என்று சொன்னால் யாருக்குத்தான் கோபமா யிராது? சோழ இளவரசர்கள் இருவரும் தப்பித்துச் சென்றுவிட்டது பராக்கிரம பாண்டியரின் கோபத்தைக் கொழுந்துவிட்டு எரியும்படி செய்தது. பழிக்குப்பழி வாங்கவேண்டும் என்னும் ஆத்திரம் அவர் மனதில் பொங்கி எழுந்தது. தம்மை அவமதித்த சோழ மன்னரை அவர் அவமானப்படுத்த விரும்பினார். அவரைச் சிறைப்படுத்தி மதுரைக்கு அழைத்துக் கொண்டு போனார். மதுரை சேர்ந்ததும் உத்தம சோழரைத் தம்முடைய ரதத்தின் அச்சில் கயிற்றினால் பிணைத்துக் கட்டும்படி செய்தார். தாமும் ரதத்தில் உட்கார்ந்து கொண்டு ரதத்தை ஓட்டச் சொன்னார். இந்தப் பயங்கரமான ஊர்வலம் மதுரைமா நகரின் வீதிகளில் சென்றபோது

இரு பக்கமும் நகர மாந்தர் நின்று வேடிக்கை பார்த்தார்கள். சிலர் தங்கள் அரசருடைய வீரத்தை வியந்து பாராட்டி ஜெயகோஷம் செய்தார்கள். சிலர் உத்தம சோழனுடைய கர்வ பங்கத்தை எண்ணிக் குதூகலப்பட்டார்கள். ஒரு சிலருக்கு அந்தக் காட்சி மிக்க வருத்தத்தை அளித்தது. அப்படி வருத்தப்பட்டவர்களில் ஒருத்தி பாண்டிய மன்னருடைய குமாரி புவன மோகினி. தன்னுடைய தந்தை வெற்றி மாலை சூடித் தஞ்சையிலிருந்து திரும்பி வந்தபிறகு மதுரை நகரின் வீதிகளில் வலம் வருவதைப் பார்க்க அவள் விரும்பியது இயற்கைதானே?

பாண்டிய மன்னனின் அரண்மனை மேன்மாடத்தில் நின்று புவனமோகினி ஊர்வலக் காட்சியைப் பார்த்தாள். தன் தந்தை ஏறியிருந்த ரதத்தின் அச்சில் யாரோ ஒரு வயதான பெரிய மனிதரைச் சேர்த்துக் கட்டியிருப்பதும் அவருடைய தேகத்திலே ஒரு பாதி தெருவில் கிடந்து தேய்ந்து கொண்டே வருவதும் அவள் கண்ணுக்குத் தெரிந்தது. அந்தக் காட்சியைப் பார்ப்பதற்கு அவளுக்குச் சகிக்கவில்லை. 'இப்படியும் ஒரு கொடுமை உண்டா?' என்று பயங்கரமும் துயரமும் அடைந்தாள். உணர்ச்சி மிகுதியினால் மூர்ச்சை போட்டு விழுந்து விட்டாள். இதைப் பார்த்திருந்த சேடிகள் உடனே பாண்டியருக்குச் செய்தி அனுப்பினார்கள்.

பாண்டியர் ஊர்வலத்தை நிறுத்தி விட்டு அரண்மனைக்குத் திரும்பினார். புவன மோகினிக்கு மூர்ச்சை தெளிந்ததும் அவள் தந்தையிடம் தன் மனக் கருத்தை வெளியிட்டாள். 'ஒரு பெரிய வம்சத்தில் பிறந்த அரசர் போரிலே தோல்வி யடைந்தால், அவரை இப்படி ரதத்திலே சேர்த்துக் கட்டித் தெருவிலே இழுத்துக் கொண்டு போவது என்ன அநியாயம்? இது அநாகரிகம் அல்லவா? இப்படி நீங்கள் செய்யலாமா?' என்று அவள் கேட்டதற்குப் பாண்டியர், 'அவன் எத்தனை பெரிய வம்சத்தில் பிறந்தவனா யிருந்தால் என்ன? என் அருமைக் குமாரியை அவனுடைய அரண்மனையில் குற்றேவல் செய்ய அனுப்பும்படி சொன்னான். அப்படிப்பட்டவனுடைய அகம்பாவத்தை வேறு எந்த விதத்தில் நான் அடக்குவது? உத்தம சோழனுக்கு நீ பரிந்து பேசாதே! வேறு ஏதாவது சொல்லு!' என்றார். புவன மோகினி தந்தைக்கு நல்ல வார்த்தை சொல்லி அவருடையகோபத்தைத் தணித்தாள். அதன் பேரில் உத்தம சோழரைத் தனிச் சிறையில் அடைக்கும்படியும் அவருக்கு மற்றப்படி வேண்டிய சௌகரியங்கள் எல்லாம் செய்து கொடுக்கும்படியும் பராக்கிரம பாண்டியர் கட்டளையிட்டார்..."

இவ்விடத்தில் அம் மங்கையின் காதலன் குறுக்கிட்டு "ஆஹாஹா! பாண்டிய நாட்டின் கருணையே கருணை!" என்றான். பிறகு அவனே கதையைத் தொடர்ந்தான் :—

"உத்தம சோழரின் புதல்வர்கள் இருவரும் பாண்டிய வீரர்களிடமிருந்து தப்பித்துக் கொண்டு கொல்லி மலைபோய்ச் சேர்ந்தார்கள். அவர்களுடன் இன்னும் சில சோழநாட்டு வீரர்களும் வந்து சேர்ந்து கொண்டார்கள். கொல்லி மலைப் பிரதேசம் இப்போது எப்படி இருக்கிறதோ, என்னமோ, தெரியாது. அந்த நாளில் கொல்லி மலையும் அதன் அடிவாரமும் மிகச் செழிப்பான வனங்களால் சூழப்பட்டிருந்தன. அந்த வனப் பிரதேசத்தின் அழகைச் சொல்லி முடியாது. இந்த மோகினித் தீவு அழகான தீவு என்பது உண்மைதான். ஆனால் கொல்லி மலையின் வனப்புக்கு இது அருகிலே கூட வர முடியாது. வருஷம் முந்நூற்றறுபத் தைந்து தினங்களும் கனிகள் தரக் கூடிய மாமரங்களும், நாரத்தை மரங்களும் அங்கு ஏராளமாயிருந்தன. அங்கிருந்த பலா மரங்கள் அவ்வளவு ஏராளமான பெரிய பலாப் பழங்களைக் கிளைகளில் சுமந்து கொண்டு எப்படித்தான் விழாமல் நிற்கின்றன என்னும் வியப்பைப் பார்ப்பவர்களின் மனதில் உண்டாக்கும்.

உணவுக் கவலையேயின்றி ஒளிந்து வாழ்வதற்குக் கொல்லி மலையைப் போன்ற இடம் வேறு இல்லை என்றே சொல்லலாம். முற்காலத்தில் கரிகால சோழன் ஒளிந்து வாழவேண்டிய அவசியம் ஏற்பட்டபோது கொல்லி மலைக்குத்தான் போயிருந்ததாகச் சொல்லுவதுண்டு. இந்த மலையில் அப்போது சில சித்தர்கள் தவம் செய்துகொண்டிருந்தார்கள். கரிகாலன் தன்னைக்

காப்பாற்ற வேண்டும் என்று அந்தச் சித்தர்களை வேண்டிக் கொண்டாராம். அவர்களும் ஆகட்டும் என்று ஒப்புக் கொண்டார்களாம். கரிகாலனைத் தேடிக் கொண்டு அவனுடைய விரோதிகளின் ஒற்றர்கள் கொல்லி மலைக்கு வர ஆரம்பித்தார்கள். சித்தர்கள் என்ன செய்தார்கள் தெரியுமா? ஒரு அழகான பெண்ணின் வடிவமாக ஒரு இயந்திரப் பதுமையைச் செய்தார்கள். அந்தப் பதுமைக்குள்ளே ஒரு கூரிய வாளை ஒளித்து வைத்தார்கள். பதுமையைப் பார்ப்பவர்கள் அது உண்மையான பெண் என்றே நினைக்கும்படியிருந்தது. நினைப்பது மட்டுமல்ல; அந்தப் பதுமையின் அழகினால் கவரப்பட்டு யாரும் அதன் அருகில் செல்ல விரும்புவார்கள். கரிகாலனைத் தேடிக் கொண்டு வந்த ஒற்றர்கள் அந்தப் பதுமையைப் பார்த்ததும் அதன் அழகில் மயங்கி அருகில் வந்து உயிருள்ள பெண்ணாகவே கருதி அதைத் தீண்டுவார்கள். அவ்வளவுதான்; அந்தப் பதுமையின் எந்த அவயவத்தில் மனிதனுடைய கை பட்ட போதிலும், உடனே அந்தப் பதுமையில் மறைந்துள்ள இயந்திரம் இயங்கி, அதன் வயிற்றுக்குள்ளேயிருந்து மிக வேகத்துடன் கூரிய வாள் வெளிவந்து தன்னைத் தீண்டியவனைக் குத்திக் கொன்றுவிடுமாம்! இதனால் அந்தப் பதுமைக்குக் '**கொல்லியம் பாவை**' என்று பெயர் வந்ததாம். அந்தக் கொல்லியம் பாவை அங்கே இருந்த காரணத்தினாலேயே அந்த மலைக்குக் கொல்லி மலை என்று பெயர் வந்ததாகவும் சொல்லுவதுண்டு. ஆனால் அதெல்லாம் பழங்காலத்துக் கதை. சோழநாட்டு இளவரசர்கள் இருவரும் அவர்களுடைய தோழர்களும் கொல்லி மலைக்குப் போனபோது அங்கே 'கொல்லியம் பாவை' இருக்கவில்லை. ஆனால் அவர்கள் ஒவ்வொருவர் கையிலும் வாளும் வேலும் இருந்தன. சுகுமாரனும் ஆதித்தனும் பராக்கிரம பாண்டியன் மீது பழி வாங்கத் துடிதுடித்தார்கள். அவர்களைத் தொடர்ந்து வந்த சோழநாட்டு வீரர்கள் இளவரசர்களைக் காட்டிலும் அதிக ஆத்திரங் கொண்டிருந்தார்கள். ஆனால் ஐம்பதினாயிரம் போர் வீரர்களும் யானைப்படை குதிரைப் படைகளும் உடைய பாண்டிய சாம்ராஜ்யத்தை எதிர்த்து ஒரு இருபது வீரர்கள் என்ன செய்ய முடியும்? ஆகையால் செய்ய வேண்டியது என்ன என்பதைப் பற்றிப் பற்பல யோசனைகள் செய்தார்கள். இரகசியமாகப் படை திரட்டிச் சேர்ப்பதற்குக் கொல்லி மலைக் காடு மிகவும் வசதியான இடம். அவர்களிலே சிலர் சந்நியாசிகளைப் போல் வேஷம் தரித்துச் சோழ நாடெங்கும் சுற்றிச் சோழ குலத்திடம் உண்மையான விசுவாசம் கொண்ட வீரர்களைத் திரட்டவேண்டும். அப்படித் திரட்டியவர்களை யெல்லாம் குறிப்பிட்ட அடையாளங்களுடன் கொல்லி மலைப் பிரதேசத்துக்கு அனுப்ப வேண்டும். இன்னும் ஆயுதங்கள், உணவுப் பொருள்கள் முதலியவையும் கொண்டு வந்து சேர்க்கவேண்டும். இவ்விதம் போதுமான படை சேர்ந்தவுடனே தஞ்சாவூர் மீது படையெடுத்துச் செல்ல வேண்டும். அங்கிருந்து மதுரைக்கும் போகவேண்டியதுதான். பராக்கிரம பாண்டியனைப் பூண்டோடு அழித்து விட வேண்டியதுதான். இப்படியெல்லாம் அவர்கள் திட்டம்போட்டார்கள்.

ஆனால் எல்லாவற்றிற்கும் முதலிலே செய்ய வேண்டியது ஒன்று இருந்தது. அவர்களில் யாராவது ஒருவர் மாறு வேடம் பூண்டு மதுரைக்குப் போக வேண்டும். பாண்டியனுடைய சிறையிலிருந்து உத்தம சோழரை எப்படியாவது தந்திரத்தினால் விடுதலை செய்து அழைத்து வரவேண்டும். உத்தம சோழர் பத்திரமாய்க் கொல்லி மலைக்கு வந்து சேர்ந்த பிறகுதான் மற்றக் காரியம் எதுவும் செய்ய முடியும். அப்படியின்றி, உத்தம சோழர் பாண்டியனுடைய சிறையில் இருக்கும் போது சோழ இளவரசர்கள் படை திரட்டுவதாகத் தெரிந்தால்கூட அந்த மூர்க்கங் கொண்ட பாண்டியன் அவரைக் கொன்றுவிடக் கூடுமல்லவா?

மதுரைக்கு மாறு வேடம் பூண்டு சென்று அந்த மகாசாகஸமான செயலை யார் புரிவது என்பது பற்றி அவர்களுக்குள் விவாதம் எழுந்தது. ஒவ்வொரு வீரனும் தான் போவதாக முன் வந்தான். ஆதித்தன் தன் தந்தையை விடுவித்துக் கொண்டு வரும் பொறுப்பு தன்னுடையது என்று சாதித்தான். பட்டத்து இளவரசனு

கிய சுகுமாரன் மட்டும் போகக் கூடாது என்று மற்றவர்கள் அனைவரும் ஒரு முகமாகச் சொன்னார்கள். ஆனால் சுகுமாரனுக்கோ வேறு யாரிடத்திலும் அந்தக் கடினமான வேலையை ஒப்படைக்க விருப்பமில்லை. நீண்ட விவாதத்துக்குப் பிறகு, கடைசியில் அவர்கள் ஒரு முடிவுக்கு வந்தார்கள். கொல்லிமலைப் பிரதேசத்தில் மர நெருக்கம் இல்லாத ஓர் இடத்தைக் கண்டு பிடித்து அங்கே ஒவ்வொருவரும் அவரவருடைய வேலைப் பலங் கொண்ட மட்டும் வீசி எறிய வேண்டியது. யாருடைய வேல் அதிகமான தூரத்தில் போய் விழுகிறதோ அவன் மதுரைக்குப் போகவேண்டியது. ஒரு வருஷ காலத்துக்குள் அவன் உத்தம சோழரை விடுவித்துக் கொண்டு வந்து சேராவிட்டால், அடுத்தபடியாக நெடுந்தூரம் வேல் எறிந்த வீரன் மதுரைக்குப் போக வேண்டியது. இந்த யோசனையைச் சுகுமாரன் சொன்னதும் வேறுவழியின்றி எல்லாரும் ஒப்புக் கொண்டார்கள். ஒவ்வொருவனும் தன் உடம்பிலுள்ள சக்தி முழுவதையும் பிரயோகித்து வெகு தூரத்தில் போய் விழும்படியாகத்தான் வேலை வீசி எறிந்தான். ஆனால் சுகுமாரனுடைய வேல்தான் மற்ற எல்லோருடைய வேல்களைக் காட்டிலும் அதிக தூரத்தில் போய் விழுந்தது. அதனால் கடவுளுடைய விருப்பம் அப்படி யிருக்கிறதென்று ஒப்புக்கொண்டு மற்றவர்கள் சுகுமாரனுக்கு விடை கொடுத்து அனுப்பினார்கள். சுகுமாரன் மிக உற்சாகத்துடனே மதுரைக்குப் புறப்பட்டான்.

மதுரைமாநகரின் செல்வச் சிறப்புகளைப் பற்றியும் மீனாக்ஷி அம்மன் கோவிலின் மகிமையைப் பற்றியும் சுகுமாரன் எவ்வளவோ கேள்விப்பட்டிருந்தான். முற்காலத்தில் சங்கப் புலவர்கள் வாழ்ந்து தமிழ் வளர்த்த நகரம் மதுரை என்பதும் அவனுக்குத் தெரிந்துதானிருந்தது. அப்படிப்பட்ட மதுரை நகரைப் பார்க்க வேண்டும் என்ற ஆசை அவன் மனதில் வெகு நாளாகக் குடிகொண்டிருந்தது. அந்த ஆசை இப்பொழுது நிறைவேறப் போகிறதென்றால், அவன் உற்சாகம் கொள்வதற்குக் கேட்பானேன்? தன்னுடைய சாமர்த்தியத்தினால் தந்தையை விடுவித்துக்கொண்டு வந்து விடலாம் என்ற நம்பிக்கையும் அவனுக்குப் பூரணமாக இருந்தது. எனினும் பாண்டிய நாட்டுத் தலைநகரில் தன்னுடைய வாழ்க்கையையே அடியோடு மாற்றி விடப் போகிற அநுபவம் கிட்டப் போகிறது என்பதாகச் சுகுமாரன் சிறிதும் எதிர் பார்க்கவில்லை. மதுரை நகரில் ஒரு 'கொல்லியம்பாவை' இருக்கிறது என்றும், அந்த உயிர்ப் பாவையின் முகத்தில் உள்ள இரண்டு கண்களாகிற வாளாயுதங்களும் அருகில் நெருங்கியவர்களின் நெஞ்சைப் பிளந்து விடக் கூடியவை யென்றும், அவன் கனவிலோ கற்பனையிலோ கூட எண்ணவில்லை!..."

(தொடரும்)

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

கல்கி

## 26. பர்தோலி - ஆனந்த்

இந்தியாவின் சுதந்திர சரித்திரத்திலும் மகாத்மா காந்தியின் வாழ்க்கையிலும் "பர்தோலி" என்னும் பெயர் மிகவும் முக்கியமானது. பாரத நாட்டுக்குப் பர்தோலிதான் விடுதலை தேடித் தரப் போகிறது என்று 1921-ம் ஆண்டின் இறுதியில் அனைவரும் நம்பியிருந்தார்கள். காந்திஜி இந்தியாவின் சுதந்திரத்துக்கான இறுதிப் போரைப் பர்தோலியிலேதான் ஆரம்பித்து நடத்துவது என்று தீர்மானித்திருந்தார். மகாத்மா எண்ணியபடி பர்தோலியில் இறுதிப் போர் நடைபெறவில்லை. ஆயினும் பர்தோலியின் மூலமாகக் காந்தி மகானுடைய சத்திய ஜோதி சுடர்விட்டு ஒளிர்ந்தது. இது எப்படி என்பதை இந்த அத்தியாயத்திலும் வரும் அத்தியாயங்களிலும் பார்க்கப் போகிறோம்.

* * *

செப்டம்பர் மாதக் கடைசியில் சேலத்துக் காங்கிரஸ் தொண்டர்களிடம் காந்திஜி "வருகிற மூன்று மாதமும் நான் குஜராத்திலேயே இருப்பேன்" என்று சொன்னார் அல்லவா? இதற்குக் காரணம் என்ன? — ஒத்துழையாமைத் திட்டம் மகாத்மா காந்தி எதிர்பார்த்தபடி பூரணமாக நிறைவேறவில்லை. வக்கீல்களில் நூற்றுக்கு ஒருவர்தான் தொழிலை நிறுத்தினார்கள். மாணவர்களிலும் நூற்றுக்கு ஒருவர் விதந்தான் சர்க்கார் கல்வி நிலையங்களைப் பகிஷ்கரித்தார்கள். சட்டசபைகளிலோ, அதிகார வர்க்கத்தார் சொல்லுகிறபடி கையைத் தூக்கும் அங்கத்தினர்கள் நிறைந்திருந்தார்கள். ஸர், திவான் பகதூர், ராவ்பகதூர் பட்டதாரிகளில் மிக மிகச் சிலரே பட்டங்களைத் துறந்தார்கள். நாடெங்கும் மகாத்மா சென்ற இடங்களில் எல்லாம் அன்னியத் துணிக் குவியல்கள் எரிக்கப்பட்டன. ஆயினும் மகாத்மா காந்தி விரும்பிய அளவு இராட்டையும் கதர் இயக்கமும் பரவவில்லை.

இவ்விதம் மகாத்மா காந்தி கூறிய திட்டங்களைச் சரிவர நிறைவேற்றாமலிருந்தபோதிலும், நாடெங்கும் பொது மக்கள் "ஒரு வருஷத்துக்குள் சுயராஜ்யம்" என்ற மந்திரத்தை மட்டும் ஜபித்துக்கொண்டிருந்தார்கள். "மகாத்மா காந்தி சொல்லிவிட்டார். ஆகையால் இந்த வருஷத்துக்குள் சுயராஜ்யம் வந்துவிடும்" என்று லட்சக்கணக்கான மக்கள் நம்பினார்கள். மகாத்மா காந்தி எப்படியாவது சுயராஜ்யத்தைக் கொண்டுவந்து தங்கள் கையில் கொடுத்து விடுவார் என்று ஜனங்கள் எதிர்பார்த்தார்கள்.

ஆனால் மந்திரத்தினாலேயே மாங்காய் விழுந்துவிடுமா? சும்மா எதிர்பார்ப்பதினால் சுயராஜ்யம் கிடைத்துவிடுமா?— கிடைக்காது என்று காந்திஜி உணர்ந்திருந்தார். ஒரு பெரிய சட்டமறுப்புப் போராட்டம் நடத்தியே தீர வேண்டும். முன்னால் மகாத்மா சொன்ன திட்டங்களெல்லாம் சட்டமறுப்புக்கு மக்களைத் தயார் செய்யும் பொருட்டுத்தான். அந்தத் திட்டங்கள் தேசமெங்கும் ஓரளவு நிறைவேறி, எங்கேயாவது சில இடங்களில் பரிபூரணமாக நிறைவேறியிருந்தாலும் போதும், சட்டமறுப்பை அந்தச் சில இடங்களில் ஆரம்பித்து நடத்தலாம் என்று மகாத்மா எண்ணினார். அப்படிச் சில இடங்களிலாவது மகாத்மாவின் திட்டங்கள் பரிபூரணமாக நிறைவேறக் கூடுமென்றால், அந்த இடங்கள் காந்தி மகான் பிறந்த குஜராத்திலே தவிர வேறு எங்கே இருக்க முடியும்? ஒரு வருஷத்தில் மிச்சமிருந்த மூன்று மாதங்களையும் குஜராத்திலேயே கழித்து, அங்கே நன்றாய் வேலை நடந்திருக்கும் சில இடங்களைப் பொறுக்கி எடுத்து, பொதுஜனச் சட்ட மறுப்பை நடத்தவேண்டும் என்று மகாத்மா காந்தி விரும்பினார். ஆகையினாலேயே சேலத்திலிருந்து மகாத்மா குஜராத்துக்கு விரைந்து சென்றார்.

வழியில் பம்பாயில் முக்கியமான காரிய நிமித்தம் தங்கவேண்டியிருந்தது. காந்திஜியின் அழைப்புக் கிணங்க அக்டோபர் 4-ந் தேதி அகில இந்தியாவிலிருந்தும் தலைவர்கள் வந்து கூடியிருந்தார்கள். இந்தக் கூட்டத்திலேதான் அலி சகோதரர்களை ஆதரித்து வெளியான அறிக்கை தயாரிக்கப்பட்டது. இந்த அறிக்கையைப் பற்றித் தலைவர்களின் கூட்டத்தில் விவாதம் நடந்தபோது, மகாத்மாவின் மனப்போக்குக்கும் மகாராஷ்டிரத் தலைவர்களின் மனப்போக்குக்கும் இருந்த வேற்றுமை நன்கு வெளியாயிற்று. மகாத்மா தயாரித்திருந்த அறிக்கையை வரி வரியாகவும் வார்த்தை வார்த்தையாகவும் ஸ்ரீ வித்தல் பாய் படேல், ஸ்ரீ கேல்கர், ஸ்ரீ ஜயக்கர், டாக்டர் மூஞ்சே ஆகியவர்கள் ஆட்சேபித்தார்கள். காந்திஜியின் கட்சியைத் தாங்கி நின்று மேற்படி ஆட்சேபங்களுக்கெல்லாம் பளிச்சுப் பளிச்சென்று ராஜாஜி பதில் சொன்னார். லாலா லஜபதிராயும் பண்டித மோதிலால் நேருவும் ஒருவாறு சமரசப்படுத்த முயன்றார்கள். கடைசியாக, சிற்சில மாறுதல்களுடன் மகாத்மா காந்தி தயாரித்த அறிக்கை எல்லாத் தலைவர்களாலும் ஒப்புக் கொள்ளப் பட்டது.

பலம் பொருந்திய பிரிட்டிஷ் சர்க்காருடன் மகாத்மா ஒரு மகத்தான இறுதிப் போராட்டத்தைத் தொடங்க யத்தனித்துக் கொண்டிருந்தார். இரவு பகல் இருபத்துநாலு மணி நேரமும் அதே சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். இப்படிப்பட்ட சந்தர்ப்பத்தில் மதிப்புக்குரிய தலைவர்கள் சிலர் சில்லறை ஆட்சேபங்களை யெல்லாம் கிளப்பிக் கொண்டிருந்தது மகாத்மாவின் மனதை ஓரளவு புண்படுத்தியது. ஆயினும் இதைப்பற்றி அதிகமாக நினைப்பதற்குச் சாவகாசம் இருக்கவில்லை. ஏனெனில் அன்றைய தினமே, "காந்திஜியைக் கைது செய்யப் போகிறார்கள்" என்ற வதந்தி ஒன்று பரவியது. இது காந்திஜியின் காதுக்கும் எட்டியது. "அலி சகோதரர்கள் செய்த அதே குற்றத்தை நானும் செய்கிறேன்" என்று மகாத்மா காந்தி சொல்லிவிட்டுத் தமிழ் நாட்டில் அதே பேச்சைப் பேசி யிருந்தார் அல்லவா? ஆகையால் தம்மைக் கைது செய்யலாம் என்ற வதந்தியைக் காந்திஜி நம்ப வேண்டியதாக இருந்தது. ஆகவே, "என்னைக் கைது செய்தால்" என்னும் தலைப்புப் போட்டு அன்றிரவே "யங் இந்தியா"வுக்கு ஒரு கட்டுரை எழுதினார்.

ஆனால் கைது செய்யப்படுவதற்காகப் பம்பாயிலேயே காத்திருக்க மகாத்மா விரும்பவில்லை. அவர் போட்டிருந்த திட்டத்தின்படி மறுநாள் காலையில் ஆமதாபாத்துக்குப் புறப்பட்டார். கொலபா ஸ்டேஷனில் எண்ணற்ற ஜனங்கள் வந்திருந்து மகாத்மாவை வழி அனுப்பினார்கள். வந்திருந்தவர்கள் அவ்வளவு பேர் தலையிலும் வெள்ளைக் கதர்க் குல்லா (காந்தி குல்லா) விளங்கியது கண்டு மகாத்மா திருப்தியடைந்தார். ஆயினும் மக்களுடைய இந்த உற்சாகமெல்லாம் நல்ல முறையில் உபயோகப்பட்டு நல்ல பலனை அளிக்கவேண்டுமே?

பம்பாயிலிருந்து ஆமதாபாத் சென்று சில தினங்கள் சபர்மதி சத்தியாக்கிரஹ ஆசிரமத்தில் மகாத்மா தங்கியிருந்தார். அங்கிருந்தபடியே குஜராத்தின் பற்பல பகுதிகளிலும் நடந்து வரும் வேலையைப் பற்றித் தெரிந்து கொள்ளலானார். ஆங்காங்கு வேலை செய்து கொண்டிருந்த தலைவர்களும் தொண்டர்களும் ஆசிரமத்துக்கு வந்து மகாத்மாவுக்கு நிலைமையை அறிவித்தார்கள். இப்படி வந்தவர்களில் இருவர் சூரத் நகரத்திலிருந்து வந்தவர்கள். ஒருவருடைய பெயர் கல்யாண்ஜி. இன்னொருவரின் பெயர் தயாள்ஜி. இந்த இரண்டு பேரும் மகாத்மாவின் பரம பக்தர்கள். தேசத்துக்காகப் பரிபூரணத் தியாகம் செய்தவர்கள். ஸ்ரீ தயாள்ஜி தம்முடைய சொத்து முழுவதையும் (ஒரு ரூபாய் கூடத் தமக்கென்று வைத்துக் கொள்ளாமல்) திலகர் சுயராஜ்ய நிதிக்குக் கொடுத்து விட்டவர். இவர் சூரத் ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் தலைவர். ஸ்ரீ கல்யாண்ஜி மேற்படி கமிட்டியின் காரியதரிசி. இருவரும் சூரத்தில் இரண்டு "சுயராஜ்ய ஆசிரமங்கள்" நடத்தி வந்தார்கள். ஒவ்வொரு ஆசிரமத்திலும் பல இளைஞர்கள் தேசத்தொண்டுக்குப் பயிற்சி செய்விக்கப் பட்டார்கள். பயிற்சி முடிந்ததும் அத்தொண்டர்கள் ஜில்லாவின் பல பகுதிகளிலும் வேலை செய்வதற்கு அனுப்பப்பட்டு வந்தார்கள்.

இவ்வளவு அருமையான வேலை செய்துவந்த தயாள்ஜியும் கல்யாண்ஜியும் சபர்மதி ஆசிரமத்துக்கு மகாத்மா திரும்பிவந்த செய்தி அறிந்ததும் அவரைப் பார்ப்பதற்காக வந்து சேர்ந்தார்கள். சூரத் ஜில்லாவில் நடந்திருக்கும் நிர்மாண வேலைகளைப் பற்றி மகாத்மாவிடம் சொன்னார்கள். முக்கியமாக, சூரத் ஜில்லாவைச் சேர்ந்த பர்தோலி தாலூகாவில் மகாத்மாவின் நிபந்தனைகள் எல்லாம் நிறைவேறி யிருக்கின்றன வென்றும், அங்கே பொதுஜனச் சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்க வேண்டும் என்றும் கேட்டுக் கொண்டார்கள்.

ஆனால் கல்யாண்ஜி, தயாள்ஜி இவர்களுடன் தீவிரமாகப் போட்டியிட இன்னொரு மனிதர் முன்வந்தார். அவர் பெயர் அப்பாஸ் தயாப்ஜி. அவர் தொண்டு கிழவர். பரோடா சமஸ்தான ஹைகோர்ட்டில் தலைமை நீதிபதியாக இருந்து விலகியவர். எல்லையற்ற தேசபக்தி வாய்ந்தவர். காந்திஜியிடம் இணையில்லா அன்பு கொண்டவர். இவர் கெயிரா ஜில்லாவில் ஆனந்த் என்னும் தாலூகாவில் பொது ஜனச் சட்டமறுப்பு இயக்கத்தை முதன் முதலில் ஆரம்பிக்கவேண்டும் என்று வற்புறுத்தினார். மகாத்மாவிடம் அன்பு நிறைந்த கோபத்துடன் அப்பாஸ் தயாப்ஜி பேசினார். அவர் கூறியதாவது:—

"நீங்கள் கூறிய நிபந்தனையெல்லாம் நிறைவேற்றி விட்டோம். இன்னும் ஏதாவது நிபந்தனை உண்டானால், சொல்லி விடுங்கள். எல்லாவற்றையும் இப்போதே ஒரேயடியாகச் சொல்லி விடுங்கள். புதிய புதிய நிபந்தனைகளை நினைத்து நினைத்துக் கொண்டு சொல்லாதீர்கள். நீங்கள் இது வரையில் சொன்ன காரியம் எதை நாங்கள் நிறைவேற்றவில்லை? திலகர் சுயராஜ்ய நிதிக்கு என்ன பணம் கேட்டீர்களோ, அதைக் கொடுத்து விட்டேன். என்னைப் பாருங்கள்! வயது எனக்கு எழுபத்தைந்துக்கு மேல் ஆகிறது. இந்த வயதில் நீங்கள் சொன்னதற்காக நானே இராட்டையில் நூல் நூற்கிறேன். முரட்டுக் கதர்த்துணி உடுத்திக் கொண்டிருக்கிறேன். ஆனந்த் தாலூகாவில் ஒவ்வொரு கிராமத்துக்கும் நான் போனேன். அப்படிப் போனதினால் என் கிழ உடம்பிற்குள்ளேயிருக்கும் எலும்புகள் எல்லாம் இன்னும் வலிக்கின்றன. ஆயினும் நான் பொருட்படுத்தவில்லை. கிராமங்களில் ஜனங்கள் அவ்வளவு உற்சாகமாயிருக்கிறார்கள். நீங்கள் சொன்ன திட்டங்களையெல்லாம் நிறைவேற்றியிருக்கிறார்கள். இன்னும் என்ன செய்யச் சொன்னாலும் செய்யக் காத்திருக்கிறார்கள். நீங்களே நேரில் வந்து பார்த்துக் கொள்ளுங்கள். சால்ஜாப்பு மட்டும் சொல்ல வேண்டாம். தள்ளிப் போடவேண்டாம். மூன்று வருஷத்துக்கு முன்னால் கெயிரா ஜில்லாவில் நீங்கள் வரிகொடா இயக்கம் ஒரு தடவை நடத்தினீர்கள். ஆகையால் கெயிரா ஜனங்கள் ஏற்கெனவே உங்கள் கொள்கைகளை அறிந்திருக்கிறார்கள். உங்கள் முறைகளில் பயிற்சி பெற்றிருக்கிறார்கள். ஆகையால் கெயிரா ஜில்லாவுக்குத்தான் இப்போது நீங்கள் முதல் பெருமையைக் கொடுக்க வேண்டும். ஆனந்த் தாலூகாவில்தான் பொதுஜனச் சட்டமறுப்பை முதலில் ஆரம்பிக்க வேண்டும்."

அப்பாஸ் தயாப்ஜி இவ்விதம் பேசிய போது குஜராத் மாகாணத்தைச் சேர்ந்த பல தலைவர்களும் தொண்டர்களும் அங்கே இருந்தார்கள். அவர்களுடைய மனமெல்லாம் உருகிவிட்டன. வாழ்க்கையில் எவ்வளவோ உயர்ந்த அந்தஸ்துடன் வாழ்ந்த இம்மனிதர், இவ்வளவு தள்ளாத வயதில், சிறைபுகவும் கஷ்டப்படவும் தயாராக முன் வந்திருப்பதை நினைத்து வியந்தார்கள்.

ஆனால் காரியத்திலேயே கண்ணாயிருந்த சூரத் காரர்கள் விட்டுக்கொடுத்து விடவில்லை. அவர்கள் பர்தோலியிலேதான் சட்டமறுப்பு ஆரம்பிக்க வேண்டும் என்று வற்புறுத்தினார்கள். ஸ்ரீ கல்யாண்ஜி கூறியதாவது:—"ஆங்கிலேயர் முதன் முதலில் சூரத் வழியாகத்தான் இந்தியாவுக்குள் புகுந்தார்கள். சூரத்திலேதான் முதன் முதலில் அவர்கள் வியாபாரக் கிடங்குகள் ஏற்படுத்திக் கொண்டு கோட்டையும் கட்டிக் கொண்டார்கள். இங்கிருந்துதான் அவர்களுடைய வியாபாரம் பெருகிற்று; அரசியல் ஆதிக்கமும் பரவிற்று. ஆகையால் ஆங்கிலேயரின் ஆதிக்கத்தை முடிவு செய்யும் கடைசி இயக்கத்தைச் சூரத் ஜில்லாவில் தொடங்குவதுதான் நியாயம். விஷம் எந்த வழியாக ஏறியதோ, அந்த வழியாகத்தான் இறங்க வேண்டும். இங்கிலீஷ்காரர்கள் எந்த வாசல் வழியாக முதலில் நுழைந்தார்களோ, அந்த வாசல் வழியாகவே அவர்களை வெளியேற்ற வேண்டும். சூரத் அப்போது செய்த பாவத்துக்கு இப்போது பிராயச் சித்தம் செய்ய ஒரு சந்தர்ப்பம் கொடுங்கள். பர்தோலியில் பொதுஜனச் சட்டமறுப்பை ஆரம்பியுங்கள். நீங்கள் கூறிய எல்லாவித நிபந்தனைகளையும் பர்தோலியில் நிறைவேற்றியிருக்கிறோம். நேரில் வந்து பார்த்துக் கொள்ளுங்கள்."

ஸ்ரீ கல்யாண்ஜியின் வாதமும் அவருடைய பிடிவாதமும் எல்லாருடைய மனதையும் கவர்ந்தன. கடைசியில் மகாத்மா காந்தி சொன்னதாவது:—"ஆகட்டும்; நான் நேரில் வந்து பர்தோலி, ஆனந்த் இரண்டு தாலூகாக்களையும் பார்க்கிறேன். பார்த்த பிறகு, எந்தத் தாலூகா அதிகத் தகுதி பெற்றிருக்கிறதோ அங்கே இயக்கத்தை ஆரம்பிக்கலாம். இரண்டு தாலூகாக்களும் தயாராயிருந்தால் இரண்டிலும் ஆரம்பித்து விடுவோம்."

இவ்விதம் இரு தரப்பாரும் திருப்தியடையும்படி மகாத்மா பதில் கூறியதுடன், தாம் வந்து பார்ப்பதற்குள்ளே இன்னும் தீவிரமாக வேலைசெய்து வைக்கும்படியும் சொல்லி அனுப்பினார்.

# வதனத்தை அதிக மழமழப்பும் அழகும் வாய்க்கச் செய்வதற்குள்ள

## இரட்டிப்பான வழி

பாண்ட்ஸ் இரு க்ரீம்களையும் உபயோகித்து இப் பிரசித்தமான இரு வகை சௌந்தரிய பராமரிப்பை நீங்கள் அனுசரிப்பதாயின் உங்கள் வதனம் மோகன எழில் வாய்ப்பது திண்ணம்.

உங்கள் முகத்திற்கு இரண்டு க்ரீம்கள் தேவை—ஒன்று சுத்தம் செய்வதற்கு, மற்றது பாதுகாப்பிற்கு. இரவு அரிய தைலங்களடங்கிய பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம், பகலிலுள்ள தூசியையும் அழுக்கையும் நீக்கி முகத்தை சுத்தம் செய்ய. காலையில், அதிருஷ்யமான மெல்லிய பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம், மேனியைக் கருக்கும் சூரியகிரணங்களினின்று உங்கள் முகத்தை பாதுகாக்க.

**உங்கள் இருவித சௌந்தரிய பராமரிப்பு**

பிரதி இரவும், முகமீது பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் தடவி, அதன் செழுமையான தைலங்கள் உள்ளிறங்கி மலினங்களை வெளியேற்றும்படி மெதுவாகத் தேயுங்கள். துடைத்து நீக்கி, முகத்தின் விசேஷ காந்தியை கண்ணாடியில் பாருங்கள்!

பிரதிகாலையும், பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் முகத்தில் லேசாகத் தடவுங்கள். இம்மெல்லிய க்ரீம் உடனே மறைந்து, நுண் அதிருஷ்ய படலமாகி பகல் முழுதும் உங்கள் சௌந்தரியத்தைப் பாதுகாக்கிறது.




# பாண்ட்ஸ்

வியாபார விவரங்களுக்கு:
L. D. ஸெய்மூர் & கோ. (இந்தியா) லிட்.
பம்பாய் - கல்கத்தா - டில்லி - சென்னை - சோவா கோவா - காரச்சி - கொழும்பு - ரங்கூன்.

# திருவையாறு திருவிழா




கோட்டு வாத்தியம் ஸ்ரீ துரையப்ப பாகவதர்

## 3. முத்தையா பாகவதரின் முயற்சி

இரண்டு கோஷ்டிகளும் போட்டி போட்டுக்கொண்டு ஆராதனை உற்சவத்தைத் தவறாமல் நடத்திக் கொண்டு வந்தன. 1914-ம் வருஷத்தில் நடந்த ஆராதனை உற்சவத்தில் முதன் முதலாக ஹரிகேசநல்லூர் முத்தையா பாகவதர் பெரிய கோஷ்டியாரின் வற்புறுத்தலுக்கு இணங்கிக் கதை செய்ய வந்திருந்தார். ஆனால் திருவையாறு வந்ததும் இரண்டு கோஷ்டிகளாகப் பிரிந்து உற்சவத்தை நடத்தி வருவதைப் பார்த்து அவர் மனது வேதனைப்பட ஆரம்பித்தது. இரண்டு கட்சிகளையும் ஒன்றாகச் சேர்க்கும் பணியில் ஈடுபட்டார்.

1914-ம் வருஷம், ஜனவரி மாதம் 16-ந் தேதி. வெள்ளிக்கிழமை காலை ஒன்பது மணிக்கு வழக்கம்போல் சின்னக் கட்சியார் உற்சவத்தைத் தொடங்கினர். வேத பாராயண கோஷ்டிகள் புடைசூழ மங்கள வாத்தியங்கள் முழங்கக் கலச தீர்த்தங்களுடன் புறப்பட்டு அதிஷ்டானம் போய்ச் சேர்ந்தார்கள். திருநெய்த்தானம் பஞ்சு பாகவதரைக் கொண்டு க்ரமப்படி பூஜைகள் நடந்தன. தியாகப்பிரம்மம் அருளிய கீர்த்தனங்களை வித்துவான்கள் தலைக்கு ஒன்றாகப் பாடியபின் கற்பூர ஹாரத்தி செய்து விட்டு எல்லோரும் ஒன்று சேர்ந்து வந்த காட்சி பகவத் அம்சங்களே நேரில் வருகின்றனவோ என்றெண்ணி வியந்து எல்லாரும் மகிழும்படி இருந்தது.

இந்தச் சமயத்தில் பெரிய கோஷ்டியில் கதை செய்ய வந்திருந்த முத்தய்யா பாகவதர் எதிரே வந்துகொண்டிருந்தார். சின்னக் கட்சியாரின் கோஷ்டியில் வந்துகொண்டிருந்த தமது குருவாகிய திருவையாறு சபேசய்யரைப் பார்த்தார். பார்த்தவுடனேயிருந்த வணக்கத்துடனும் மலர்ந்த முகத்துடனும் அவர் அருகில் சென்று வினயத்துடன் பேசியதைப் பார்த்த எல்லோரும் பரம சந்தோஷமடைந்தனர். "இப்படி இரண்டுபட்டிருக்கும் கட்சிகள் ஒன்று சேர்ந்து உற்சவத்தை நடத்தினால் எவ்வளவு நன்றாக இருக்கும். நமது முத்தய்யா பாகவதர் மூன்று நாளாய் என்னிடம் சொல்லிக் கொண்டேயிருக்கிறார். நீங்கள் எல்லோரும் சம்மதித்தால் நல்லது. எல்லோரும் நன்கு ஆலோசித்து ஓர் ஏற்பாடு செய்யுங்கள்" என்று தஞ்சாவூர் பஞ்சாபகேச பாகவதரிடம் ஸ்ரீ சபேசய்யர் சொன்னார்.

இரண்டு கட்சிகளும் ஒன்றுபட வேண்டும் என்பது பற்றி முத்தையா பாகவதரும், சபேசய்யரும், பஞ்சாபகேச பாகவதரும் பேசிக்கொண்டே உற்சவம் நடத்தப்படும் பச்சையப்ப முதலியார் சத்திரம் வந்து சேர்ந்தார்கள்.

அப்பொழுது அதிஷ்டான பூஜைக்காகக் கிளம்பிய பெரிய கட்சியார் அந்தத் தெருவில் உள்ள தியாகப் பிரம்மத்தின் பூர்வாச்ரம கிருஹத்தைத் தரிசித்து விட்டு அதிஷ்டானம் போய்க் கொண்டிருந்தார்கள். நியாயமாகப் பெரிய கோஷ்டியாருடன் சேர்ந்து கூடவே போகக் கடமைப்பட்டிருந்த முத்தையா பாகவதர் அந்தக் கோஷ்டியாருடன் போகாமல் தங்கிக் கட்சிகளை ஒன்று சேர்க்கும் விஷயமாய்ப் பேசிக்கொண்டிருந்தார். இந்த விஷயத்தில் முத்தையா பாகவதர் அக்கறை யுள்ளவராயிருக்கிறார் என்பதை உணர்ந்த சின்னக் கட்சியார் அதே திண்ணையில் ஒரு கூட்டம் கூட்டினார்கள். முத்தையா பாகவதரைப் பார்த்துத் தஞ்சாவூர் பஞ்சாபகேச பாகவதர், "நீங்கள் இந்த இரு கட்சிகளையும் ஒன்று சேர்க்க அக்கறை கொண்டதின் காரணம் என்ன?" என்று கேட்டார்.

"பொது ஜனங்கள் பேசிக்கொண்ட சில வார்த்தைகளை நான் கேட்டதிலிருந்து என் மனம் ஒரு நிலையில் இல்லை. அதனால்

உண்டான துக்கத்தையும் சகிக்க முடியவில்லை. இந்த உற்சவத்தை நம்முடைய ஊரிலேயே நாம் ஏன் நடத்தியிருக்கக் கூடாது என்றுகூட நினைக்க நேர்ந்துவிட்டது" என்றார் முத்தையா பாகவதர்.

"என்ன வார்த்தைகளைக் கேட்டீர்கள்?" என்றார் பஞ்சாபகேச பாகவதர்.

"அதை நான் இப்போது ஒன்றும் சொல்ல முடியாது. எப்படியாவது எல்லோரும் ஒன்று சேர்ந்து நடத்துவதைத் தூர இருந்தாவது பார்த்தால் போதுமானது" என்று மிகவும் உருக்கமாகப் பதில் சொன்னார் முத்தையா பாகவதர்.

அப்பொழுது அங்கிருந்த குலமங்கலம் வைத்தியநாத பாகவதரின் அபிப்பிராயத்தைக் கேட்டார்கள். அவர் "முதலாவதாகக் கட்சிகள் ஏன் இரண்டாகப் பிரிந்தன? அதற்கு யார் காரணம்?" என்று முத்தையா பாகவதரைக் கேட்டார்.

"இதுவரை நடந்ததைப் பற்றிப் பேசிப் பயனில்லை. இனி நடக்க வேண்டியதைப் பற்றி ஏதாவது ஏற்பாடு செய்யவேண்டும்" என்றார் முத்தையா பாகவதர்.

உடனே வைத்தியநாத பாகவதர் "தாங்கள் ஒருவர் மட்டும் பேசிப் பயனில்லை. தங்களைச் சேர்ந்த எல்லோரும் வந்தால் ஒருவாறு பேசி முடிக்கலாம்" என்றார்.

"எல்லோருடைய அபிப்பிராயங்களையும் கலந்து கொண்டுதான் நான் பேச வந்திருக்கிறேன். இதில் ஏதாவது தகராறு உண்டானால் அதற்கு நான் ஜவாப்தாரி" என்றார் முத்தையா பாகவதர்.

குலமங்கலம் வைத்தியநாத பாகவதர், "முக்கியமான சிலரைக் கொண்டு ஒரு கமிட்டியை அமைக்க வேண்டும். ஒருவர் காரியதரிசியாகவும், ஒருவர் பொக்கிஷதாரராகவும், மற்றொருவர் கணக்குப் பரிசீலனை செய்பவராகவும் இருக்கவேண்டும். ஆராதனை உற்சவத்துக்கு வரும் தொகைகளை ஒழுங்காகக் கணக்கு வைத்துக் கொண்டு முக்கியமான செலவுகளை மட்டும் செய்து, பாக்கியுள்ளதைக் கட்டிடம் முதலான ஸ்திரமான காரியங்களுக்குச் செலவிட வேண்டும். அப்படி ஒரு ஒழுங்கு செய்தால் இந்தக் காரியம் நீண்ட காலம் நடந்து வருவதுடன் நமக்குக் கௌரவமும் கொடுக்கும். ஆனால் இப்படி ஒன்றுபட்டுச் சேருவது சாதாரண காரியமா?" என்றார்.


கோனேரி ராஜபுரம் வைத்தியநாதய்யர்

"முத்தையா பாகவதரே இவ்வளவு தூரம் சொல்லும்போது நாம் இதற்கு ஓர் ஏற்பாடு செய்ய வேண்டியதுதான். நாம் செய்வதைச் செய்தால் பிறகு தியாகப் பிரம்மத்தின் எண்ணம்போல் நடக்கட்டும்" என்றார் மாங்குடி சிதம்பர பாகவதர்.

பிறகு பஞ்சாபகேச பாகவதர் இந்த விஷயங்களை எல்லாம் விவரமாக எழுதி அங்குள்ள எல்லோருக்கும் கேட்கும்படி வாசிக்கச் செய்தார். வாசித்து முடிந்தவுடன் சாப்பாட்டுக்குப் பிறகு மறுபடியும் கூடி இதைப் பற்றித் தீர்மானிப்பது என்று முடிவு செய்தார்கள்.

சில நிமிஷங்களுக்கெல்லாம் வக்கீல் சீதாராமய்யர் தம் வீட்டுக்குக் கொஞ்சம் வரவேண்டும் என்று திருவையாறு சபேச ஐயரையும் தஞ்சாவூர் பஞ்சாபகேச பாகவதரையும் அழைத்துப் போனார்.

அப்பொழுது திருப்பழனம் பஞ்சாபகேச சாஸ்திரிகளும், கோனேரி ராஜபுரம் வைத்தியநாதய்யரும், முத்தையா பாகவதரும் அங்கு வந்து சேர்ந்தனர். திருப்பழனம் பஞ்சாபகேச சாஸ்திரிகள் முத்தையா பாகவதரைப் போலவே தாமும் அபிப்பிராயப் படுவதாய்த் தெரிவித்தார்.

தஞ்சாவூர் பஞ்சாபகேச பாகவதர் "பஞ்சாபகேச சாஸ்திரிகள், வைத்தியநாதய்யர், முத்தையா பாகவதர் ஆகிய மூவரும் சம்மதித்துவிட்டால் எங்கள் எல்லோருக்கும் சம்மதம்தான். ஆனால் உங்கள் கோஷ்டியாருக்கு இந்த விஷயத்தில் எவ்விதத் தடையுமில்லையே?" என்றார்.

"வேறொன்றுமில்லை. பூஜை முதலான காரியங்களை யாரைக் கொண்டு நடத்துகிறது?" என்று கேட்டார் சாஸ்திரிகள்.

"எப்படி வழக்கத்திலிருக்கிறதோ அந்தப்படி செய்வோம்" என்றார் பாகவதர்.

"அப்படிக்கில்லை; வழக்கம் ஒரு விதமாயிருந்தாலும் அதிலுள்ள உசிதம் அனுசிதம் கவனித்து நடத்துவது நமது கடமை யல்லவா?" என்றார் சாஸ்திரிகள்.

இதைக் கேட்ட பாகவதர் "எது உசிதமோ அந்தப் படி செய்வோம்" என்றார்.

"தியாகய்யரவர்களுடைய தமயனார் பேரன் ராமுடு என்றொருவர் இருக்கிறார். அவரைக் கொண்டே சகல காரியங்களையும் நடத்தும்படி ஏற்பாடு செய்ய வேண்டும்" என்றார் சாஸ்திரிகள்.

இதைக் கேட்ட தஞ்சாவூர் பஞ்சாபகேச பாகவதர் "இம்மாதிரியான கைங்கரியங்களில் வம்சபரம்பரையை விடச் சிஷ்ய பரம்பரையுடையவர்களுக்குத் தான் அதிக பாத்தியம் என்பது தங்களுக்குத் தெரியாததல்ல. தவிரவும் தாங்கள் சொன்னதின் பேரில்தான் ராமுடு என்ற ஒரு பாத்தியஸ்தர் இருப்பதாய்த் தெரிகிறது. ஆகையால் இம்மாதிரி ஒரு ஏற்பாடு செய்வோம். அதாவது அதிஷ்டான பூஜையை வழக்கம் போல் நடத்துகிற திருவெய்த்தானம் பஞ்சு பாகவதரைக் கொண்டு செய்விக்கலாம். பாத்தியஸ்தர் என்று தாங்கள் சொல்லுகிற ராமுடுவைக் கொண்டு ஆராதனையை நடத்தலாம். இந்த ஏற்பாடு உசிதமாயும் எல்லோருக்கும் தியாகப் பிரம்மத்துக்கும் திருப்தி யளிக்கக் கூடியதாயுமிருக்கும்" என்று சொன்னார்.



மிருதங்கம்
அழகநம்பியாப் பிள்ளை

அந்த ஏற்பாட்டைத் திருப்பழனம் பஞ்சாபகேச சாஸ்திரிகளும் மற்றவர்களும் ஒப்புக்கொண்டார்கள்.

அன்று இரவு மாங்குடி சிதம்பரபாகவதருடைய கதை முடிந்த பிறகு அடியில் கண்டவர்கள் ஒரு கூட்டம் கூடினார்கள். (1) குலமங்கலம் வைத்தியநாத பாகவதர். (2) குலமங்கலம் சீதாராம பாகவதர் (3) தஞ்சாவூர் பஞ்சாபகேச பாகவதர் (4) முத்தையா பாகவதர் (5) மைலாட்டூர் கிருஷ்ணையர் (6) குலமங்கலம் சௌந்தரராஜ பாகவதர் (7) பண்டித சுப்பிரமணிய சாஸ்திரிகள் இன்னும் சிலரும் இந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டார்கள். எல்லோரும் கலந்தாலோசித்த பிறகு அடியில் கண்ட தீர்மானம் நிறைவேறியது:—

"குலமங்கலம் வைத்தியநாத பாகவதர் சொன்னபடி தியாகப் பிரம்மத்தின் பெயரால் ஒரு சமாஜத்தை நிறுவி, அதில் சங்கீத கோஷ்டியிலுள்ள எல்லோரையும் சேர்த்துக் கொள்வது. சமாஜத்தின் உதவிக்காக நிர்வாக சக்தியுள்ள முக்கியமான சிலரையும் சேர்த்துக் கொள்வது. பிறகு நிர்வாகக் கமிட்டி அங்கத்தினர்களாய்ச் சிலரைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு, அதில் முக்கியமானவர்களும் கௌரவம் பொருந்தியவர்களாயும் உள்ளவர்களில் தலைவர், உபதலைவர், காரியதரிசிகள், பொக்கிஷதாரர் போன்ற பொறுப்புள்ள ஸ்தானங்களுக்கு அவரவர்களுக்குத் தகுந்தபடி நியமிப்பது. நிர்வாகக் கமிட்டியின் பெரும்பாலோரானவர்களின் அபிப்பிராயப்படி ஒவ்வொரு காரியங்களையும் நடத்த வேண்டியது."

மேற்படி தீர்மானம் அங்கிருந்த எல்லோராலும் ஆமோதிக்கப்பட்டு நிறைவேறிது.

முத்தையா பாகவதர் மேற்கண்ட ஏற்பாட்டிற்குத் தன்னைச் சேர்ந்தவர்களையும் இணங்கும்படி செய்வதாய்ச் சொன்னதுடன் அவர்கள் எல்லோரையும் மறுநாள் அழைத்து வருவதாகவும் சொன்னார். இதற்குள் பொழுதும் விடிந்தது.

**ம**றுநாள்; சனிக்கிழமை காலை பத்து மணி சமாருக்குத் திருவையாறு செட்டால் பிள்ளை வீட்டு மாடியில் மேலே கண்ட எல்லோரும் மறுபடியும் கூடினார்கள். திருப்பழனம் பஞ்சாபகேச சாஸ்திரிகளும் கோனேரிராஜபுரம் வைத்தியநாதய்யரும் முத்தையா பாகவதரும் நாகப்பட்டினம் சேதுராமய்யர் முதலானவர்களும் கூட்டத்துக்கு வந்திருந்தார்கள். முதலில் தீர்மானித்திருந்த விஷயங்களைப் பற்றி மறுபடியும் பேசப்பட்டன. எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டவுடன் தஞ்சாவூர் பஞ்சாபகேச பாகவதர் கூட்ட நடவடிக்கைகளைக் குறித்துக் கொண்டார்.

அந்தக் கூட்டத்தில் பிடில் கோவிந்தசாமிப் பிள்ளை, மிருதங்கம் அழகநம்பியாப் பிள்ளை ஆகிய இருவரும் வராமல் இருந்து விட்டார்கள். ஆகையால் மற்ற எல்லாரும் சம்மதித்திருந்த போதிலும் அதன்படி அவர்கள் நடக்க முடியாமல் போய்விட்டதாகப் பெரிய கட்சியைச் சேர்ந்த பஞ்சாபகேச சாஸ்திரிகள் ஏதோ சாக்குச் சொல்ல ஆரம்பித்து விட்டார். இப்படியாக முத்தையா பாகவதர் இரு கோஷ்டிகளையும் ஒன்று சேர்க்க ஆரம்பித்த முயற்சி பயன்படாமல் போய் விட்டது. (தொடரும்)

# கண்ணீரின் மர்மம்

ரா. பாலகிருஷ்ணன்

அந்தி மங்கும் வேளை. 'பார்க்'கில் ஜன சந்தடி அதிகமில்லாதிருந்தது. எங்கிருந்தோ ஒரு துண்டுக் காகிதம் காற்றில் பறந்து வந்து என் காலடியில் விழுந்தது. அதை எடுத்துப் படித்தேன் :—

“உங்களுக்கு ஏனோ என் விஷயத்தில் அக்கறையில்லை! நீங்கள் சென்ற பிறகு உங்கள் செய்கைக்காக நான் எவ்வளவு நேரம் அழுது புலம்புகிறேன். தெரியுமா? என் இதயம் வற்றிப் போகும் வரையில் சொட்டுச் சொட்டாக நான் கண்ணீர் உகுப்பது உங்களுக்குத் தெரியப் போகிறதா, என்ன? இதைப் படித்த பிறகாவது என்னை நீங்கள் அவல நிலையில் விட்டுச் செல்ல மாட்டீர்கள் என்று நினைக்கிறேன்.”

இதைப் படித்ததும் என் மூளை சுறுசுறுப்பாக வேலை செய்யத் தொடங்கியது. யார் எழுதியிருக்கக் கூடும், இப்படிப்பட்ட கடிதம்? யாரோ அபலைப் பெண்—காதலனால் கைவிடப்பட்டவள்—மனம் நொந்து எழுதியிருக்கிறாள் போலும்...! அல்லது யாராவது சினிமா நடிகையாக இருக்கலாமோ? யாராயிருந்தால் என்ன?

மறுபடியும் யோசனை செய்ததில், 'இம்மாதிரி ஏமாற்றத்தினால் கண் கலங்கி நிற்கும் பெண், ஒருவேளை தற்கொலை முயற்சியில் ஈடுபட்டால்......? ஆம்; அப்படியும் நடக்கலாம். அதைத் தடுக்க வேண்டியது என் பொறுப்பு' என்று தீர்மானித்தேன்.

அப்போது தோட்டக்காரன் ஒருவன் என்னை நோக்கி வந்தான். அவன் தயக்கத்துடன், “இந்தக் காகிதம் எப்படிக் கிடைச்சதுங்க, உங்களுக்கு?” என்று கேட்டான்.

அது என்னிடம் சிக்கிய விதத்தை நான் அவனிடம் உள்ளது உள்ளபடி சொன்னேன்.

“இதைத் தேடிக்கிட்டுத்தான் அலையறேன் நான்; இப்படிக் கொடுங்க, அதை!” என்றான் அவன்.

தோட்டக்காரனுக்கும் அந்தக் காதல் கடிதத்துக்குமுள்ள சம்பந்தம் எனக்கு விளங்கவில்லை. மறுபடியும் என் புத்தி தீட்சண்யமடைந்தது. 'ஒருவேளை அவன் மூலமே அக் கடிதப் போக்குவரவு நடக்கிறதோ' என்று சந்தேகித்தேன். 'எப்படியிருந்தால் என்ன?' என்று அதை அவனிடம் கொடுத்துவிட்டு ரகசியமாக நான் அவன் பின்னால் சென்றேன்.

'பார்க்'கின் மத்தியில் குடி தண்ணீர்த் தொட்டி ஒன்று இருந்தது. என்னிடமிருந்து பெற்றுச் சென்ற அக் காகிதத்தைத் தோட்டக்காரன் சாவதானமாக அந்தத் தொட்டியின்மீது ஒட்டி விட்டுத் திரும்பினான். யாரோ, யாருக்கோ எழுதிய காதல் கடிதத்தைத் தண்ணீர்த் தொட்டியின்மேல் ஒட்டுவானேன்? இதில் ஏதோ சூது இருக்கவேண்டும் என்று தீர்மானித்து நான் வைத்த கண் வாங்காமல் அவனையே பார்த்துக்கொண்டு நின்றேன்.

“ஒண்ணுமில்லீங்க! பொது ஜனங்க தண்ணியைக் குடிச்சுட்டுக் குழாவை மூடி வைக்காமே போயிடுறாங்க. தொட்டி சீக்கிரம் காலியாயிடுது. அதுக்காக ஜனங்க மனசு உருகும்படியா, குழாயே கேட்டுக்கிடறது போல ஒரு கடுதாசு எழுதிக் கொடுத்து, பார்க் சூபர்வைசரு இங்கே ஒட்டிவைக்கச் சொன்னாரு; தொட்டி மேலே நான் பசை தடவிக்கிட்டிருந்தப்போ இது பறந்து உங்களண்டை வந்திடுச்சு! எங்கே, இப்போ படிச்சுப் பாருங்க—சரியாயிருக்குதான்னு?” என்றான் தோட்டக்காரன்.

கண்ணீரின் மர்மத்தை அறிந்த நான் அவனுக்கு என்ன பதில் சொல்லுவது?

---




“டேய்! என்ன நம்பர் போட்டிருக்கிறது, பார்த்தாயா? ஒருத்தரும் ஏறக் கூடாது, தெரியுமா?”




# ஒன்று பட்டால்...

விந்தன்

மாலை மணி ஐந்து இருக்கும். வெள்ளி நாயகம், தங்கநாயகத்தின் குடிசை வாசலில் வந்து நின்றுகொண்டு, "அண்ணே! கூட்டத்துக்கு வாரயா?" என்று கேட்டான்.

"வாரேன், தம்பி!" என்று சொல்லிக்கொண்டே வெளியே வந்தான் தங்கநாயகம்.

இருவரும் கடற்கரையை நோக்கி நடந்தனர். வழியில், "ஏன் அண்ணே! நம்ம சங்கத்தை யாரோ தொறந்து வைக்கப் போறாங்கன்னு சொன்னயே, அது யாரு, அண்ணே?" என்று கேட்டான் வெள்ளி நாயகம்.

"அவருதான் நம்ம தலைவரு சண்டமாருதம்!" என்றான் தங்கநாயகம்.

"அவருக்கு கர்மைப் பத்தி என்ன தெரியும்? பாவம், அவருக்கு நடந்து கூடப் பழக்கமில்லை போல இருக்குதே!"

"நல்லாச் சொன்னே! அவரு எம்மாம் பணம் வச்சிருக்காரு!"

"ஓஹோ! அதுக்காவத்தான் அவரைக் கூப்பிட்டிருக்காங்களா? — சரி, எனக்கு ஒரு சந்தேகம், அண்ணே......!"

"என்ன சந்தேகம்?"

"அந்தச் சங்கத்தை 'நம்ம சங்கம்'னு நான் எப்படிச் சொல்லிக்கிடறது, அண்ணே?"

"ஏன் சொல்லிக்கிடக் கூடாது?"

"என்ன இருந்தாலும் நீ வேறே, நான் வேறே இல்லையா?"

"என்ன வேறே? நீயும் கூலி, நானும் கூலிதானே?"

"அது சரி, ரெண்டு பேரும் கூலியாயிருந்தாலும் நமக்குள்ளே வித்தியாசம் இருக்குதில்லே?"

"என்ன தம்பி, வித்தியாசம்......?"

"நீ ரயில்வே கூலி. உனக்குன்னு ஒரு சட்டை, கிட்டை எல்லாம் கொடுத்திருக்காங்க. எனக்கு அப்படியில்லை, பாரு! நான் கண்ட சட்டையைப் போட்டுக்கிட்டு நினைச்ச இடத்திலே நின்னுக்கிட்டு இருக்கிறவன்தானே?"

"என் சட்டையைச் சொல்லு, 'கூலி'ன்னு நெத்தியிலே எழுதி ஒட்டி வச்சிருக்காப்போலே! பார்க்கப் போனா எல்லாம் பொதி சுமக்கிற ரெண்டு கால் கழுதைங்கதானே? அதிலே வித்தியாசம் ஒரு கேடா?"

"அப்படிச் சொல்லிப்பிட முடியுமா?"

"அட, நீ ஒண்ணு! அதுக்காவத்தானே நம்ம சங்கத்துக்குச் 'கூலிங்க சங்கம்'னு பொதுவா பேரு வச்சியிருக்காங்க!"

"என்னமோ போ, அண்ணே! எனக்கு ஒண்ணும் புரியலே!"




மயிலாப்பூர் வாசி :—என்ன ஸார்! தெரியாத்தனமாக இந்த மயிலாப்பூருக்குக் குடி வந்துவிட்டேன். இங்கே டிராம் வண்டி போடுகிற சத்தத்தில் மத்தியான வேளையிலே தூக்கமே வர மாட்டேங்கறது!

மாம்பல வாசி :—உங்கள் பாடு தேவலைங்க! நான் மயிலாப்பூரிலிருந்து மாம்பலம் வந்து விட்டேன். டிராம் வண்டி சத்தம் இல்லாமல் தூக்கம் வர மாட்டேங்கறதுங்க!

---

அதற்குள் கடற்கரை நெருங்கிவிடவே, அவர்களுடைய பேச்சு நின்றது. மேடைக்கு அருகே இருவரும் நல்ல இடமாகப் பார்த்து உட்கார்ந்து கொண்டனர்.

★

ஸ்ரீமான் சண்டமாருதம் ஆடம்பரத்தை வெறுத்தவர். போனாற் போகிறதென்று ஒரு சாதாரண சட்டையைக் கூட அவர் அணிவதில்லை. எப்பொழுது பார்த்தாலும் ஒரு நாலு முழத் துண்டைத்தான் அவர் மேலே போர்த்திக் கொண்டிருப்பார். ஆனால் வசிப்பதற்கு இருபது ஏக்கர் விஸ்தீரணத்தில் ஒரு சிறு பங்களாவும், போக்குவரவுக்கு ஒரே ஒரு 'பியூக்' காரும் அவரிடம் இருந்தன. எளிய வாழ்க்கை இன்னதென்று தெரியாத சிலர் அவற்றை ஒரு பெருங் குற்றமாகக் கருதினர். ஸ்ரீமான் சண்டமாருதம் பெருந்தன்மையுடையவராதலால் அந்த அற்பக் குற்றத்தை அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை.

அன்று சரியாக ஐந்தரை மணிக்கு அவர் தம்முடைய காரில் வந்து இறங்கியதும், "ஸ்ரீமான் சண்டமாருதத்துக்கு ஜே!" என்ற கோஷம் வானைப் பிளப்பதற்குப் பதிலாகக் கோஷமிட்டவர்களின் காதைப் பிளந்தது. தலைவர் மேடைக்கு வந்த பிறகு தாமதத்துக்கு ஒன்றுமில்லையல்லவா? உடனே கூலிகள் சங்கத்தின் திறப்பு விழா அமர்க்களமாக ஆரம்பமாயிற்று. ஓர் இளைஞர் மேடையின்மீது கம்பீரமாக ஏறி நின்று,

"ஒன்றுபட்டால் உண்டுவாழ்வே—நம்மில்
ஒற்றுமைநீங்கில் அனைவர்க்கும் தாழ்வே
நன்றிது தேர்ந்திடல் வேண்டும்—இந்த
ஞானம்வந்தாற்பின் நமக்கெது வேண்டும்?"

என்னும் பாரதியாரின் பாடலை உரத்த குரலில் பாட ஆரம்பித்தார். கூட்டத்தில் அமைதி நிலவியது.

பாட்டு முடிந்ததும் தங்கநாயகம் ஒரு நீண்ட கரகோஷம் செய்து விட்டு, "கேட்டயா, தம்பி? நம்ம வாழ்வு, தாழ்வு எல்லாம் எங்கே இருக்குதுன்னு இப்போ வாச்சும் தெரிஞ்சுக்கிட்டயா?" என்று உற்சாகத்துடன் கேட்டான்.

"எங்கே இருக்குதாம்?" என்று வெறுப்புடன் அவனைத் திருப்பிக் கேட்டான் வெள்ளிநாயகம்.

"இதுகூட உனக்குத் தெரியவில்லையா? — அட, பாவி! எல்லோரும் ஒத்துமையா இருக்கிறதுலே இருக்குது!" என்றான் தங்கநாயகம் பெருமையுடன்.

"ஆமாமாம்; ஆனா ......"

"ஆனா என்னா? உனக்கு எப்போ பார்த்தாலும் சந்தேகம்தான்!" என்று தங்கநாயகம் அலுத்துக் கொண்டான்.

அதே சமயத்தில் "உஸ் ..." என்ற சத்தம் சபையில் பல இடங்களிலிருந்து எழுந்தது. அதைத் தொடர்ந்து ஸ்ரீமான் சண்டமாருதம் எழுந்து ஒலிபெருக்கியின் முன்னால் நின்றார். "தயவுசெய்து அமைதியுடன் இருங்கள்" என்று அவர் சபையோரைக் கேட்டுக்கொண்டு தம் பிரசங்கத்தை ஆரம்பித்தார். அவருடைய பேச்சிலும் அன்று ஒற்றுமைதான் முக்கிய ஸ்தானம் வகித்தது. ஏனெனில், கூலிகளுக்குத் தங்கள் சங்கத்தால் நன்மை விளைந்தாலும் சரி, நன்மை விளையாவிட்டாலும் சரி—அந்தப் பழியை 'ஒற்றுமை'யின்மேல் போட்டு விட்டுத் தாம் தப்பித்துக் கொள்ளலாமல்லவா? ஆகவே, அழுத்தந் திருத்தமாக "ஒற்றுமை இன்றேல் ஒன்றுமே இல்லை; ஒற்றுமை வழி ஒன்றே வழி!" என்று முழங்கி விட்டு, அவர் திறப்பதற்கு ஒன்றுமே இல்லாத 'கூலிகள் சங்க'த்தை 'கம்மனாச்சும்' திறந்து வைத்தார். அவருக்கு அடுத்தாற்

போல் பேசிய இன்னும் சிலரும் ஒற்றுமையைப் பற்றியே ஓயாமல் பேசிப் பேசி ஓய்ந்தார்கள். ஒரு குரோஸ் சோடா புட்டிகள் காலியான பிறகு கூட்டம் இனிது முடிவதற்குப் பதிலாக ஒரே களிப்புடன் முடிந்தது. காரணம் வேறொன்றுமில்லை; சோடாதான்!

கூட்டம் முடிந்ததும் தங்கநாயகமும் வெள்ளிநாயகமும் எழுந்து தங்கள் தங்கள் வீடுகளை நோக்கி நடந்தனர். பிரசங்கிகள் கூலிகளை ஒரு கணம் மறந்து, தாங்கள் அன்றைய தினம் பேசிய பேச்சுக்களுக்காக ஒருவரை யொருவர் பாராட்டிக் கொண்டனர். பிறகு, "கேவலம் ஒரு சட்டசபை அங்கத்தினர் பதவிக்குக் கூட இந்தக் காலத்தில் எவ்வளவு பாடு பட வேண்டியிருக்கிறது!" என்ற தங்களுடைய ஆற்றாமையை ஆளுக்குக் கொஞ்சம் பகிர்ந்து கொண்டு அவர்கள் கலைந்து சென்றனர்.

★

மறு நாள் மாலை வெள்ளிநாயகம் வழக்கம் போல் சென்னை 'பாரிஸ் கார்ன'ரில் அப்படியும் இப்படியுமாக நடை போட்டுக் கொண்டிருந்தான். அதுவரை சம்பாதித்திருந்த எட்டணாக் காசு அவன் மடியில் பத்திரமாக இருந்தது. அதை எடுத்து அவன் அடிக்கடி எண்ணிப் பார்த்துக் கொண்டான். எத்தனை தரம் எண்ணிப் பார்த்தாலும் அந்தப் பாழும் எட்டணா, எட்டணாவாகவே இருந்தது!

அதை வைத்துக் கொண்டு அவனும் அவனுடைய மனைவி மக்களும் அன்றையப் பொழுதை எப்படிக் கழிப்பது? இன்னும் ஒரு எட்டணாவாவது கிடைத்தால் தேவலை. அதற்காக யாராவது கையில் ஒரு சிறு பையுடன் சென்றாலும், "ஏன் சாமி! கூலி வேணுமா, சாமி?" என்று அவன் கேட்டுக் கொண்டேயிருந்தான். கிறுக்குப் பேர்வழி ஒருவர், "என்னிடம் கூலிக்கு ஒன்றுமில்லை; என்னை வேண்டுமானால் தூக்கிக் கொண்டுபோய் என் வீட்டில் விடுகிறாயா?" என்று கேட்டபோதுகூட அவன் சளைக்கவில்லை; "ஆகட்டும், சாமி! என் தோள்மேலே வேணுமானால் உங்களைத் தூக்கிக்கிட்டு வாரேன்! எப்படியாச்சும் காசு கிடைச்சா சரி!" என்று சொல்லிக் கொண்டே அவரை நெருங்கினான். "போடா, போ!" என்று சொல்லி விட்டு அந்த மனிதர் விரைந்தார்.

சிறிது நேரத்துக்குப் பிறகு ஒரு பெரிய மனிதர் பெட்டி, படுக்கையுடன் ரிக்ஷாவில் வந்து பஸ் நிலையத்தில் இறங்கினார். ரிக்ஷாவாலா அவரிடம் கூலி பெற்றுக் கொண்டு அப்பால் சென்றதும் வெள்ளிநாயகம் ஓடோடியும் வந்து, "ஏன் சாமி! எங்கே போவணும்?" என்று கேட்டான்.

"பெங்களூருக்கு!—ஏன், நீயும் வருகிறாயா?" என்றார் அவர் சிரித்துக் கொண்டே.

"நீங்க அம்மாந் தூரம் நடந்து போறதா இருந்தா, நானும் அம்மாந் தூரம் நடந்து வாரேன், சாமி!" என்றான் வெள்ளிநாயகமும் சிரித்துக் கொண்டே.

அதற்குள் ஒன்ணும் நம்பர் பஸ் வந்து நின்றது. பெரிய மனிதர் வெள்ளி நாயகத்தை அலட்சியமாக ஒரு பார்வை பார்த்துக் கொண்டே, பெட்டியையும் படுக்கையையும் தூக்கிக்கொண்டு போய் பஸ்ஸில் வைத்தார்.

கண்டக்டர், "பெட்டி, படுக்கைகளைப் பஸ்ஸில் ஏற்றக் கூடாதுங்க!" என்றான்.

"ஏன்?" என்று கேட்டார் பெரிய மனிதர்.

"எனக்குத் தெரியாதுங்க; உங்கள் சர்க்காரைக் கேளுங்க!" என்று சொல்லி விட்டு, அவன் டிரைவரை நோக்கி, "போ, ஐயா! ரைட்!" என்று அலட்சியமாக ஒரு 'விஸில்' அடித்தான். பஸ் அங்கிருந்து கிளம்பிவிட்டது.





ஒருவர் (கண் பார்வை மந்தம்):—இந்த ஹோட்டலில் நல்ல நாற்காலிகளே கிடையாதோ? உட்கார்ந்தால் கூரடு முரடாய்க் குத்துகிறதே!

ஸர்வர்:—நீங்கள், எச்சில் தட்டுகளைப் போட்டிருக்கும் வாளியிலிருந்து கொஞ்சம் எழுந்திருந்தால் நாற்காலி குத்தாமலிருக்கும்!

---

வெள்ளிநாயகம் பெரிய மனிதரைப் பார்த்தான்; பெரிய மனிதர் வெள்ளிநாயகத்தைப் பார்த்தார்.

"இப்போவெல்லாம் பட்டணத்திலே எந்தப் பஸ்ஸிலும் பெட்டி, படுக்கைகளை ஏத்தறதில்லைங்க!" என்றான் வெள்ளிநாயகம்.

"நாசமாய்ப் போச்சு! நான் இப்போது ஸெண்ட்ரல் ஸ்டேஷனுக்குப் போக வேண்டுமே, என்ன செய்வது?" என்று முணுமுணுத்தார் பெரிய மனிதர்.

"இதோ, பக்கத்திலே பீச்சு டேசன் இருக்குதுங்க; அங்கேயிருந்து பார்க்கு டேசனுக்கு எலெக்டிக் வண்டி போகுதுங்க; அதிலே பெட்டி, படுக்கையெல்லாம் ஏத்துவாங்க. ரொம்பக் காசுகூட இல்லே; ஓரணாதான்!—பார்க்குலேயிருந்து ஸெண்ட்ரல் டேசன் ரொம்ப ரொம்பக் கிட்ட!" என்று அவருக்குத் தூபம் போட்டான் வெள்ளிநாயகம்.

சிக்கனத்தை உத்தேசித்துப் பெரிய மனிதர் அவன் சொன்னதை ஒப்புக்கொண்டார். வெள்ளிநாயகம் அவருடைய பெட்டி, படுக்கைகளைத் தூக்கிக்கொண்டு பீச் ஸ்டேஷனை நோக்கி நடந்தான். பெரிய மனிதர் அவனைப் பின் தொடர்ந்தார்.

வழியில் வெள்ளிநாயகத்துக்கு ஒரு சபலம் தட்டிற்று. பீச் ஸ்டேஷன் வரை சென்றால் ஐயா ஓரணா கொடுப்பாரோ, இரண்டணா கொடுப்பாரோ! ஸெண்ட்ரல் ஸ்டேஷன் வரை தானே சென்று அவரை வண்டியில் ஏற்றிவிட்டால் எட்டணாவாவது கொடுக்க மாட்டாரா?—இவ்வாறு எண்ணியதும் அவன் அந்தப் பெரிய மனிதரை நோக்கி, "நானே ஸெண்ட்ரல் வரை வந்து உங்களை வண்டியில் ஏத்தி விடட்டுங்களா?" என்றான். ஒரே கூலியாயிருந்தால் தமக்கும் சௌகரியந்தானே என்று எண்ணி, அவரும் "சரி" என்றார்.

அவ்வளவுதான்; வெள்ளிநாயகத்துக்குத் தெம்பு பிறந்துவிட்டது. அவன் குதிநடை போட்டுக்கொண்டு சென்றான். அன்றையக் கவலை தீர்ந்த பிறகு இந்த உலகத்தில் தன்னைப் பொறுத்தவரை அவனுக்கு வேறு எவ்விதக் கவலையும் இல்லையல்லவா?



ஜிகுஜிக்கு.........ஜிகுஜிக்கு.........ஜிகுஜிக்கு......ஜிகுஜிக்கு......ஜிகுஜிக்கு......

தலை தெறிக்கும் வேகத்தில் சென்னை மாநகரின் அமைதியைக் குலைத்துக்கொண்டு வந்த எலெக்ட்ரிக் ட்ரெயின் பார்க் ஸ்டேஷனை அடைந்தது.

அதற்குள் வரிசை வரிசையாகத் தெரு விளக்குகள் எரிய ஆரம்பித்து விட்டன. இருந்தாலும், பெரிய மனிதர் கூலிக்காரனின் மூலம் தம்முடைய அந்தஸ்தை உலகத்துக்கு ஓரளவு வெளிச்சம் போட்டுக் காட்டிக் கொண்டு வந்தது தனி வெளிச்சமாய்த்தானிருந்தது.

ஆயிற்று; இதோ, ஸெண்ட்ரல் ஸ்டேஷனின் மணிக்கூண்டு கம்பீரமாகத் தனக்கு எதிரே நிற்கிறது. இன்னும் இரண்டே நிமிஷத்தில் பிளாட்பாரத்தை அடைந்துவிடலாம்......

அப்புறம்.........?

எட்டணாக் காசு இந்தக் கைமேல் 'டக்' கென்று விழும். தன்னிடம் ஏற்கெனவே எட்டணாக் காசு இருக்கிறது—முழுசாக ஒரு ரூபாய்!—இன்று வீட்டுக்கு இத்துடன் கம்பி நீட்டி விடலாம்!

அதோ, தங்கநாயகம் அண்ணன் கூடத் தனக்கு எதிரே சொல்லி வைத்தாற் போல் வருகிறதே!

அது போட்டிருக்கிற ஜதாச் சட்டையும், சிவப்புப் பட்டையும், அதிலே

'போர்ட்டர்' என்று எழுதியிருக்கிற அழகும், அடாடாடாடா! — ஊம், அண்ணனுக்கு என்ன குறைவு? — தன்னைப் போலவா?

அடடே! அண்ணன் ஏதோ பாட்டுக் கூடப் பாடுகிறதே!

என்ன பாட்டாயிருக்கும் ......?

ஆம், அதுதான்; அதுவேதான்!— "ஒன்றுபட்டால் உண்டு, வாழ்வே......!"

நேற்று கேட்ட பாட்டை அண்ணன் மறக்காம அப்படியே பிடித்துக் கொண்டு விட்டது......!

ஐயோ, இது என்ன சங்கடம்?

அண்ணன் தன்னை ஏன் அப்படி முறைத்துப் பார்க்கிறது? அதன் மீசை ஏன் அப்படித் துடிக்கிறது? கண்களில் கணத்துக்குக் கணம் ஏன் அப்படிச் சிவப்பு ஏறுகிறது?

ஒன்றும் புரியவில்லை வெள்ளிநாயகத்துக்கு. "என்ன அண்ணே......!" என்று அவன் தங்கநாயகத்தை நெருங்கியதும் ஆரம்பித்தான்.

"அண்ணே, அண்ணேன்னு சொல்லி ஆளை ஏய்க்கவாடா பார்க்கிறே? இங்கே கூலி எடுத்துக்கிட்டு வர உனக்கு என்னடா அம்மாந் தைரியம்? நான் இங்கே வேலை மெனக்கெட்டா இருக்குறேன்!" என்று ஆவேசத்துடன் கூறி, வெள்ளிநாயகத்தின் தலைமேலிருந்த படுக்கையைப் பலவந்தமாகத் தூக்கித் தன் தலைமேல் வைத்துக்கொண்டு, அவன் கையிலிருந்த பெட்டியையும் 'வெடுக்'கென்று பிடுங்கிக் கொண்டான் தங்கநாயகம்.

"அண்ணே, அண்ணே! நம்ம வாழ்வு, தாழ்வு எல்லாம்......" என்று அவன் முதல் நாள் சொன்னதை அப்படியே திருப்பிச் சொல்ல ஆரம்பித்தான் வெள்ளிநாயகம்.

"ஆமாம், போடா! எனக்கு எல்லாம் தெரியும் — நம்ம வாழ்வு, தாழ்வு எல்லாம் அவனவன் வயித்திலேதான் இருக்குது!" என்று சொல்லிவிட்டுப் பிளாட்பாரத்தை நோக்கி நடந்தான் தங்கநாயகம்.

பெரிய மனிதர் தம்மைப் பாதிக்காத விஷயங்களில் எப்பொழுதுமே சட்டத்தையும் ஒழுங்கையும் கடைப் பிடிப்பவர். ஆகவே, அவர் வெள்ளிநாயகத்தை அத்துடன் விட்டுவிட்டுத் தங்கநாயகத்தைத் தொடர்ந்து சென்றார்.

"எனக்கு ஒண்ணும் கூலி இல்லையா, சாமி?" என்றான் வெள்ளிநாயகம்.

அவனிடம் காலணாவை வீசி எறிந்து விட்டு மேலே நடந்தார் பெரிய மனிதர்.




### என்ன செய்வது?

டாக்டர் :—என்ன ஸார், குழந்தைக்கு காலு வேளைக்குச் சேர்த்தாற்போல் மருந்து கொடுத்தால் அதை இரண்டு நாளில் கொடுத்துத் தீர்த்து விட்டீர்களே !

அவர் :—நான் என்ன செய்யட்டும், டாக்டர் ஸார் ! குழந்தைக்கு மருந்து கொடுக்கும் ஒவ்வொரு தடவையும் நானும் என் மனைவியும் கொஞ்சம் மருந்து சாப்பிட வேண்டி யிருக்கிறதே !

★

### வாஸ்தவம் !

அம்மா :—என்டா, ராமு ! பரீக்ஷை யெல்லாம்தான் முடிந்து போய்விட்டதே, இந்த வருஷத்துப் புஸ்தகங்களை விற்று விடுகிறதுதானே ?

ராமு :—பேசாமல் இரு, அம்மா ! எதையும் அவசரப் பட்டுக்கொண்டு செய்யக் கூடாது ! ஒரு வேளை அடுத்த வருஷமும் இதே வகுப்பில் இருக்க வேண்டி வந்து விட்டால் என்ன செய்கிறது ?

★

### சரிதான் !

"சேச்சே ! இந்த ஹோட்டல் சாப்பாடு எனக்கு ரொம்ப அலுத்துப் போய்விட்டது. எங்கள் வீட்டுச் சமையல் மாதிரி சாப்பிட வேண்டும்போல ஆசையா யிருக்கிறது. நீங்கதான் நம்ம வீட்டிலே சாப்பிட்டிருக்கிறீர்களே !"

"அதற்கென்ன சிரமம் ! இந்தச் சமையற்காரர் கிட்டேயே சொல்லி இன்னும் கொஞ்சம் உப்பை அதிகமாகப் போடச் சொல்லிவிட்டால் போகிறது !"



### என்ன ஆச்சரியம் !

வீட்டுக்காரர் :—நீங்கள் வாடகையே கொடுக்காமல் இருப்பதைப் பார்த்தால் எனக்கு ஆச்சரியமா யிருக்கிறது !

குடியிருப்பவர் :—நீங்கள் ஆச்சரியப்படுவானேன் ? நான்தான் வாடகை கொடுக்கவில்லையே !

★

### ஆமாம் !

வக்கீல் (எதிர்க் கட்சியைச் சேர்ந்த சாட்சியிடம்) :—நீ இதற்கு முன் சிறை சென்றது உண்டா ?

சாட்சி :—உண்டுங்க !

வக்கீல் :—எதற்காக ?

சாட்சி :—சிறைச்சாலையில் வெள்ளை அடிப்பதற்காக அழைத்துக் கொண்டு போனார்கள்.

★

### அசட்டுக் காரியம் !

மனைவி :—என்னை முதல் முதலில் பார்க்க வந்தீர்களே, அப்போது உங்கள் முகத்தில் அசடு வழிந்தது !

புருஷன் :— இருக்காதா ? எத்தனை அசட்டுக் காரியம் நான் செய்தது !

---

## காபரா !




"என்ன ஐயா அநியாயம் ! சோற்றிலே பூச்சியும் கிச்சியும் கிடக்கிறதே ! உங்க முதலாளி எங்கே ஐயா ? அவரைக் கூப்பிடும் !"

சமையற்காரர் :-எங்க முதலாளி வர மாட்டார், ஸார் ! அவருக்குப் பூச்சி என்றால் ரொம்பவும் காபரா, ஸார் !




பத்தாம் அத்தியாயம்

## நள்ளிரவில்

"ஸ்வேதாங்கா!"

"ஸ்வாமி!"

"நீ இன்று என்ன கண்டாய் என்பதைச் சொல்ல முடியுமா?"

"முடியாமல் என்ன ஸ்வாமி? எஜமானியம்மாள் இன்று யோகி குமாரகிரியைத் தோற்க அடித்ததைக் கண்டேன். அதை நினைக்க நினைக்க எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டாகிறது."

இதைக் கேட்ட பீஜகுப்தனுக்குச் சிரிப்பு வந்து விட்டது. அவன் சிரித்த அந்தச் சிரிப்பிலே ஒருவித வறட்சி தோய்ந்திருந்தது. "யோகி குமாரகிரியைச் சித்திரலேகா தோற்க அடித்த விஷயத்தில் உனக்கு வேண்டுமானால் மட்டற்ற மகிழ்ச்சி தோன்றலாம். ஆனால் ஸ்வேதாங்கா! எனக்கு அளவிலாத வருத்தம்தான் உண்டாகிறது. 'இதேதடா இது? இவன் சொல்வது மிகவும் விந்தையாக அல்லவா இருக்கிறது!' என்று நீ ஆச்சரியப்படலாம். ஆனால் நான் சொல்வது முற்றிலும் உண்மை. அதில் துளிக் கூடப் பொய்க் கலப்பே கிடையாது. நீ சிரிக்கலாம்; ஏன்? நான் கூட ஒரு வேளை சிரிக்கலாம். ஆனால் என்னுடைய ஆத்மா அழத்தான் செய்கிறது" என்றான்.

"எஜமானர் சொல்வது எனக்குச் சரியாகவே விளங்கவில்லையே!" என்றான் ஸ்வேதாங்கன். அவனுடைய முகத்தில் ஆச்சரியக் குறி தோன்றியது.

"சரியாக விளங்கவில்லையா? ஆமாம், உனக்கு எங்கே விளங்கப் போகிறது? விளங்காதுதான். உலகத்தை நீ இன்னும் சரிவரப் புரிந்துகொண்ட பாடில்லை. உனக்கு உலகானுபவம் போதாது. நீ சித்திரலேகாவுக்கு வெற்றி கிட்டிவிட்டதாக எண்ணுகிறாய் அல்லவா? உண்மையில் அவளுக்கு வெற்றி கிட்டவில்லை; மாபெரும் தோல்வி தான் கிட்டியிருக்கிறது. சித்திரலேகா—குமாரகிரி இவ்விருவரில் யாருமே ஜயிக்கவில்லை; இருவருமே தோற்று விட்டனர்! காலச் சக்கரம் வெகு வேகமாகச் சுழன்று கொண்டிருக்கிறது. அந்தச் சக்கரத்தின் சுழற்சியில் இருவருமே சிக்கிக் கொண்டு விட்டனர்" என்றான் பீஜகுப்தன்.

பீஜகுப்தன் சொல்வது அப்பொழுதும் ஸ்வேதாங்கனுக்குச் சரியாக விளங்கவில்லை. அதற்குள் ரதம் பீஜகுப்தனின் மாளிகை வாசலிலே வந்து நின்றது. இருவரும் ரதத்திலிருந்து இறங்கினர். பீஜகுப்தன் ஸ்வேதாங்கனின் இரு கைகளையும் பற்றிக் கொண்டு, "உன்னிடம் இன்னும் எவ்வளவோ பேச வேண்டியிருக்கிறது. வா, என்னுடன் வந்து சிறிது நேரம் உட்காரு!" என்று அழைத்தான்.

உண்மையிலேயே ஸ்வேதாங்கனுக்குப் பீஜகுப்தன் சொன்னது ஒன்றுமே புரியவில்லை. அவனுக்குப் பீஜகுப்தன் வார்த்தைகள் கண்ணைக் கட்டிக் காட்டில் விட்டது போலிருந்தன. எஜமானன்—ஊழியன் இருவரும் கல்விச் சாலைக்குள் நுழைந்தனர். ஸ்வேதாங்கனையும் ஆசனத்தில் அமருமாறு சொல்லிவிட்டுப் பீஜகுப்தன் ஆசனத்தில் அமர்ந்தான். பிறகு, "ஸ்வேதாங்கா, குமாரகிரிக்குத் தோல்வி ஏற்பட்டதன் காரணம் உனக்குத் தெரியுமா?" என்று கேட்டான்.

ஸ்வேதாங்கன் "தெரியாது" என்னும் பாவனையில் தலையை அசைத்தான்.

"அதன் ரகசியத்தைச் சொல்கிறேன், கேள். சித்திரலேகாவைப் பற்றி எனக்குத் தெரிந்திருக்கும் அளவு உனக்குத் தெரிந்திருக்க நியாயமில்லை. சித்திரலேகா அழகில் சிறந்தவள்; அறிவாற்றல் மிக்கவள்.

அவனுடைய குணாதிசயங்களும் சொல்லத் தரமன்று. யாரையுமே கவர்ந்துவிடக் கூடிய அபார சக்தி அவனிடம் நிறைந் திருக்கிறது. குமாரகிரி மெத்தப் படித்தவன்; மிகமிகப் பெரிய அறிவாளி; மாபெரும் யோகியும் கூட. ஆசைகளையும் அறவே வெறுத்தவன். அவனுக்கும் ஆசைகளுக்கும் ஜன்மப் பகை. சித்திரலேகாவும் நல்ல அறிவாளிதான். ஆயினும் அவளுக்குச் சாதனையைக் கண்டால் சற்றும் பிடிக்காது. அவள் சாதனைக்கு நேர் எதிரி. குமாரகிரி—சித்திரலேகா இருவருமே அகம்பாவத்தில் ஊறித் திளைத்தவர்கள்; அகந்தைக்கு அடிமையானவர்கள். அது மட்டும் அல்ல; இருவருமே தம் தம் அகங்காரத்தில் அபார நம்பிக்கை பூண்டவர்கள்; செருக்கையே பூஷணமாகக் கொண்டவர்கள். ஆனால் இருவருடைய மார்க்கமும் வெவ்வேறானவை; விபரீதமான போக்கு உடையவை. ஒருவனோ சாதனையைச் சரண் அடைந்திருக்கிறான்; மற்றொருத்தியோ தன்னம்பிக்கையைச் சரண்புகுந்திருக்கிறாள். ஆனால் இன்று நடந்த நிகழ்ச்சியின் காரணமாக, இருவருமே தங்கள் தங்கள் மார்க்கங்களை வெறுக்கத் தொடங்கிவிட்டனர். வெகு சீக்கிரத்திலேயே இருவரும் தம் தம் சக்திகளைக் கூட இழந்து விடுவார்கள்" என்றான் பீஜகுப்தன்.



பீஜகுப்தன் சொன்ன ஒவ்வொரு சொல்லும் சுவேதாங்கனுக்கு மாபெரும் புதிராகத் தோற்றமளிக்கத் தொடங்கியது. "ஸ்வாமி! பொருள் புதைந்த தங்களுடைய சொற்களைப் புரிந்துகொள்வது மிகவும் சிரமமாகத் தோன்றுகிறதே!" என்றான்.

பீஜகுப்தனின் குரல் மிகவும் கம்மியது. "இந்த விஷயங்களை மிகத் தெளிவாகச் சொல்லும் திறமை எனக்கில்லை; அப்படிச் சொல்வதும் எனக்கு உசிதமாகத் தோன்றவில்லை. நீ அறிந்து கொள்ளத்தான் வேண்டுமென்று விரும்பினால், நான் சொல்லும் வழியே செல்லவேண்டும். அதற்குச் சம்மதமா?" என்று கேட்டான் அவன்.

"எஜமானர் உத்தரவு கொடுக்க வேண்டியதுதான்; சொல்லும் பாதையிலே செல்லச் சித்தமாயிருக்கிறேன்" என்று மிகவும் வினயமாகப் பதில் அளித்தான் சுவேதாங்கன்.

"இன்றைக்கே நீ சித்திரலேகாவுக்கு வாழ்த்துக் கூறுவதற்காகப் போ! அவளுடைய முகத்தில் ஏற்படும் பாவங்களை அறிந்து வா!" என்றான் பீஜகுப்தன்.

•  •  •

சுவேதாங்கன் அப்பொழுதே சித்திரலேகாவின் மாளிகைக்குப் புறப்பட்டுச் சென்றான். அவன் போனபொழுது சித்திரலேகாவின் மாளிகை கண்ணைக் கூசும் தீபாலங்காரங்களோடு விளங்கியது. வாழ்த்துக் கூறுவதற்காக வந்திருந்த சிற்றரசர்களின் கூட்டம் வாசலைச் சூழ்ந்து நின்று கொண்டிருந்தது. சித்திரலேகாவின் பணிப் பெண்கள் அவர்களை வரவேற்று உபசரித்துக் கொண்டிருந்தனர். ஆனால் சித்திரலேகாவை மட்டும் அங்கே காணோம்.



சுவேதாங்கன் ஒரு பணிப் பெண்ணைக் கூப்பிட்டு, "எஜமானி அம்மாள் எங்கே இருக்கிறாள்?" என்று கேட்டான். அவள் அவனை மாளிகைக்குள்ளே அழைத்துச் சென்று, மிக நேர்த்தியாக அலங்கரிக்கப் பட்டிருந்த அறையொன்றிலே உட்கார வைத்து "எஜமானியம்மாள் இன்னும் வரக் காணோம். வரவேண்டிய நேரம்தான்!" என்று சொன்னான். சுவேதாங்கன் அந்த அறையிலே அமர்ந்து சித்திரலேகாவின் வரவை எதிர்நோக்கலானான்.

சித்திரலேகாவின் வரவை எதிர்பார்த்து எதிர்பார்த்து நம்பிக்கை இழந்துபோன சிற்றரசர்களின் கூட்டம் சிறிது சிறிதாகக் கலைய ஆரம்பித்து விட்டது. ஒவ்வொருவராக எல்லாச் சிற்றரசர்களுமே சென்று விட்டனர். காலதேவன் தன் ரதத்தை நிறுத்தாமல் ஓட்டிக்கொண்டேயிருந்தான். வெகு நேரமாகியும் சித்திரலேகா திரும்பவில்லை. அவ்வளவு நேரம் ஆகியும் அவள் திரும்பி வராதது சுவேதாங்கனுக்கு ஆச்சரியத்தை அளித்தது. 'இந்த வேளையில் சித்திரலேகா எங்கே போயிருக்கக் கூடும்?' என்ற சிந்தனை அவனுடைய உள்ளத்தில் எழுந்தது. ஆனால் அதற்கு மேல் அவனுக்குச் சிந்தனை ஓடவில்லை. அவன் மறுபடியும் பணிப் பெண்ணை அழைத்து, "எஜமானியம்மாள் திரும்பிவர இன்னும் எவ்வளவு நேரம் ஆகும்?" என்று கேட்டான். "எவ்வளவு நேரம் ஆகும் என்று சொல்வதற்கில்லை" என்று ஒரே வார்த்தையில் பதில் சொல்லி விட்டாள் அவள்.

சுவேதாங்கனுக்கு அவளை எதிர்பார்த்துக் கொண்டேயிருப்பதில் அலுப்புத் தட்டி விட்டது. நடுநிசி வேளை நெருங்கியும்கூடச் சித்திரலேகாவைக் காணோம். 'வீட்டுக்குத் திரும்பிப் போய் விடுவோமா?' என்று சுவேதாங்கன் பல தடவைகள் யோசித்தான். ஆனால் சித்திரலேகாவைக் கண்டு செல்லவேண்டும் என்னும் அவா அவனை அவ்வாறு செய்யவிடவில்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் 'நடுநிசி நேரம் ஆகிவிட்டது' என்பதற்கு அடையாளமாக 'டணார், டணார்' என்ற மங்கள நாதத்துடன் மணியோசை எழுந்தது. சுவேதாங்கன் எழுந்து வீட்டுக்குப் புறப்பட்டான். புறப்படுவதற்கு முன்பு பக்கத்திலிருந்த பணிப் பெண்ணைப் பார்த்து, "எஜமானியம்மாள் வந்ததும் நான் வாழ்த்துக் கூற வந்திருந்ததாகவும் வெகுநேரம் வரை காத்திருந்ததாகவும் சொல்லு" என்று சொல்லிவிட்டு மாளிகையை விட்டு வெளியேறினான். வாசலுக்கு அவன் வந்ததும் சித்திரலேகாவின் ரதம் வருவதைக் கண்ணுற்றான். ஆகவே அவன் அவளைப் பார்த்து வாழ்த்துக் கூறிவிட்டுப் போகலாம் என்று நின்றுவிட்டான்.

சுவேதாங்கன் சித்திரலேகாவைக் கைலாகு கொடுத்து ரதத்திலிருந்து இறக்கினான். சுவேதாங்கனைப் பார்த்ததும் சித்திரலேகா புன்முறுவலுடன், "சொல்லு, சுவேதாங்கா! என்ன சமாசாரம்? இரவு இவ்வளவு நேரம் வரை கண் விழித்துக் கஷ்டப்படும்படியாக அப்படி என்ன அவசரக்காரியம் வந்து விட்டது?" என்று பரபரப்புடன் கேட்டாள்.

"எஜமானிக்கு வாழ்த்துக் கூறுவதற்காகத்தான் இவ்வளவு அவசரம்!" என்று சொல்லிவிட்டு, அவன் 'களுக்' கென்று சிரித்தான்.

சித்திரலேகாவின் கைகளோடு கை கோத்துக் கொண்டு, சுவேதாங்கன் அவளுடைய சிங்கார விடுதி வரை சென்றான். "சுவேதாங்கா! நீ என்னுடைய விருந்தினர் விடுதியில் உட்கார்ந்து கொண்டிரு.

நான் இதோ வருகிறேன்" என்று சொல்லிவிட்டுச் சித்திரலேகா தன் சிங்கார விடுதிக்குள் சென்று விட்டாள்.

மாற்று உடை உடுத்திக்கொண்டு சித்திரலேகா விருந்தினர் விடுதிக்குள் நுழைந்தாள். அப்பொழுது அவள் துல்லியமான வெள்ளை ஆடை மட்டுமே உடுத்தியிருந்தாள். அவள் வந்து ஆசனத்தில் அமர்ந்ததும், "என், சுவேதாங்கா! நீ எனக்கு எதற்காகவோ வாழ்த்துக் கூற வந்திருப்பதாகச் சொன்னாயே! எனக்கா வாழ்த்து? எதற்காக?" என்று கேட்டாள்.

"தங்களுக்குக் கிடைத்த வெற்றிக்காகத்தான்!" என்றான் சுவேதாங்கன்.

"எனக்குக் கிடைத்த வெற்றிக்காகவா?"

சிறிது நேரத்துக்கு முன், வரும் பொழுது உல்லாசமும் மகிழ்ச்சியும் தாண்டவமாடிக் கொண்டிருந்த சித்திரலேகாவின் முகம் களை யிழந்து பேய் அறைந்தது போலக் காணப்பட்டது. யௌவனம் தரும் இன்ப வெறியிலே துயரம் தோய்ந்திருக்கக் கூடும் என்ற எண்ணம் சுவேதாங்கனுக்கு அதுகாறும் எழுந்ததில்லை. சித்திரலேகாவின் முகத்திலே உண்டான பாவ மாறுதலை முதன் முதலாகக் கண்ட அவனுக்கு ஒன்றுமே சரியாக விளங்கவில்லை. அழகிய முகத்தில் ஏற்படும் பாவ மாறுதலிலேதான் என்ன அழகு! துயரத்தினால் சோபை யிழந்து காணப்பட்ட அந்த முகத்திலும் கூடச் சுவேதாங்கனுக்கு ஒரு தனிக் கவர்ச்சி இருப்பதாகத் தோன்றியது. அந்த அறையிலே எரிந்து கொண்டிருந்த ஆயிரமாயிரம் விளக்குகள் வேறு அவளுடைய அழகைப் பன்மடங்கு அதிகமாக எடுத்துக் காட்டிக் கொண்டிருந்தன. "என் வெற்றிக்காகவா? சுவேதாங்கா! நான் வாழ்த்துக்குப் பாத்திரமானவளே அல்ல; ஏனெனில் எனக்குக் கிடைத்தது வெற்றி அல்ல, மாபெரும் தோல்விதான்!" என்றாள்.

பீஜகுப்தன் சொன்னதையேதான் சித்திரலேகாவும் சொன்னாள். பீஜகுப்தனைப் போலவே அவளுடைய குரலிலும் கம்பீரம் தொனித்தது.



அதைக் காணச் சுவேதாங்கனுக்கு மிகவும் ஆச்சரியமாகப் போய்விட்டது.

சுவேதாங்கனின் முகத்திலே தோன்றிய பாவங்களைச் சித்திரலேகா நன்கு உணர்ந்து கொண்டாள். உடனே அவள் "நான் சொல்வதெல்லாம் உனக்கு ஆச்சரியமாகத் தோன்றலாம். ஆனால் இதில் ஆச்சரியப்படுவதற்கு ஒன்றும் இல்லை—அதிருக்கட்டும், நான் இப்பொழுது எங்கே போயிருந்தேன் என்று உனக்குத் தெரியுமா?" என்று கேட்டாள்.

"அதே கேள்வியைத்தான் நானும் உங்களிடம் கேட்கவேண்டும் என்று விரும்பினேன். ஆனால் கேட்கத்தான் துணிவு ஏற்படவில்லை" என்றான் சுவேதாங்கன்.

"அப்படியானால் கேள்: நான் குமாரகிரியின் குடிசைக்குச் சென்றிருந்தேன். இப்பொழுது நேரே அங்கிருந்துதான் திரும்பி வந்திருக்கிறேன். குமாரகிரியைத் தோற்கடிக்க வேண்டும் என்றோ, அவமானப் படுத்தவேண்டும் என்றோ நான் எண்ணியதே யில்லை. நான் அப்படி எண்ணுவதற்கு யாதொரு விதமான காரணமும் இல்லை. அவனை அவமானப்படுத்துவதற்குத்தான் எனக்கு ஏது உரிமை? ஏனெனில் அவன் வழி வேறு; என் வழி வேறு. இரண்டுக்கும் துளிக்கூடச் சம்பந்தம் இல்லை. கற்றோர் செல்லும் பாதையில் என் போன்றோர் காலடி எடுத்து வைப்பதே உசிதமில்லை. நான் செய்த காரியம் மிகத் தவறான காரியம்தான். ஆகவே மன்னிப்புக் கோருவதற்காக நான் அவனிடம் போயிருந்தேன்" என்றாள் சித்திரலேகா.

இதைக் கேட்ட சுவேதாங்கன் மனம் கலங்கினான். சித்திரலேகாவின் மனோபாவத்திலே இதென்ன விசித்திரமான திகர் மாறுதல்! அவன் எவ்வளவோ மண்டையை உடைத்துக் கொண்டான். ஆயினும் அவனால் அதைச் சரிவரப் புரிந்து கொள்ளத்தான் முடியவில்லை.

"நியாயத்தை எடுத்துச் சொல்லும் விஷயத்தில் பீனமேஷம் பார்ப்பது சிறிதும் உசிதமாகாது. வீண் பிரமையில் உழல வைத்து

மனிதனை மனிதன் ஏமாற்றிப் பிழைக்கத் துணிந்தால், அவனுடைய உண்மை நிலைமையை விளக்கி அம்பலத்துக்குக் கொண்டு வரவேண்டியதுதான் நேர்மை வாய்ந்த ஒவ்வொரு மனிதனுடைய கடமையும் ஆகும். ஆகவே அம்மா, தாங்கள் செய்த காரியம் மிகச் சரியான காரியம்தான்" என்றான்.

"இதை நினைக்கும்பொழுதுதான் எனக்குத் துக்கம் இன்னும் பன்மடங்கு அதிகமாகிறது. உலகம் முழுவதும் நான் செய்த காரியத்தைச் சரியானதென்றே எண்ணுகிறது. ஆனால், என்னால் அப்படி எண்ணவே முடியவில்லை. குமாரகிரி யோகி. அவனிடம் பல சக்திகள் குடிகொண்டிருக்கின்றன. அவன் காட்டிய கடவுளும் சக்தியும் அவனுடைய கற்பனையில் உதித்த பொருள்களாகவே இருக்கலாம். ஆனால் அம்மாதிரியான சீரிய கற்பனைகள் ஒரு மனிதனிடத்திலே உதிப்பதென்றால் அது நடக்கக்கூடாத காரியமாக அல்லவா தோன்றுகிறது! அந்தக் கற்பனை ஊற்று எங்கே சுரக்கிறது, எப்படிச் சுரக்கிறது என்பதுதான் நம் முன்னே நிற்கும் மாபெரும் பிரச்னை. குமாரகிரியிடத்திலே ஆக்கல் திறன் அபாரமாக இருக்கிறது. ஆனால் நான் என்ன அசட்டுக் காரியம் செய்து விட்டேன்? அழித்தல் தொழிலை அல்லவா மேற்கொண்டு விட்டேன்? ஒரு விஷயத்தைத் தர்க்கத்தினால் தகர்த்தெறிந்து விடுவது பிரமாதமான விஷயம் அல்ல; அந்த விஷயத்தை நிலைநாட்டப் பாடுபடுவதுதான் பெரிய காரியம். அழிப்பதில். ஒரு பெருமையும் இல்லை; ஆக்குவதில்தான் பெருமையிருக்கிறது."

"அது நியாயந்தான். பார்ப்பதற்குப் படாடோபமான — ஆனால் அதில் வசிக்கும் மனிதர்களுக்குத் தீங்கு இழைக்கக்கூடியதான கட்டிடம் ஒன்றை ஒரு மனிதன் கட்டுகிறான் என்று வைத்துக் கொள்ளுங்கள். அப்படிப்பட்ட கட்டிடத்தை இடித்து விடுவதுதானே உசிதம்?" என்று கேட்டான் சுவேதாங்கன்.

சித்திரலேகா அந்தக் கேள்வியைக் கேட்டுச் சிரித்து விட்டாள். "இம்மாதிரி தர்க்கம் புரிவதனால் ஒரு விதமான பிரயோசனமும் இல்லை. நான் செய்தது தவறு என்பதை நானே நன்கு உணர்கிறேன். அப்படி இருக்கும்பொழுது வீண் தர்க்கம் செய்வதனால் என்ன லாபம்? ஏதோ நடந்தது நடந்து விட்டது. அதற்காக

## திறப்பாளர்!



"நீங்கள் அந்தக் கட்டிடத்தைத் திறந்து வைத்தீர்கள், இந்தக் கட்டிடத்தைத் திறந்து வைத்தீர்கள் என்று உங்கள் பெயர் பத்திரிகைகளிலெல்லாம் அடிபடுகிறதே, தயவு செய்து இந்தப் பொடி டப்பியைத் திறந்து கொடுங்கள், பார்க்கலாம்!

வருந்தி என்ன பயன்? அதன் பலனை அது பலித்துத்தான் தீரவேண்டும்" என்றாள்.

"பலனா!"—சுவேதாங்கனுக்கு இது இன்னும் மிகச் சிக்கலான பிரச்னையாகத் தோன்றியது. "பலனை அநுபவிக்கவேண்டும் என்கிறீர்களே, அது என்ன பலன், அம்மா?" என்று கேட்டான் அவன்.

"அது உனக்குக் கூடிய சீக்கிரத்தில் தெரிந்துவிடும்" என்று சொல்லிச் சித்திரலேகா பணிப் பெண்ணைக் கூப்பிட்டாள்.

"நான் இன்னும் சாப்பிடவில்லை, சுவேதாங்கா! நீயும் இன்னும் சாப்பிட்டிருக்க மாட்டாய் என்று எண்ணுகிறேன்" என்றாள். அதற்குள் பணிப் பெண் வந்து விடவே இரண்டு பேருக்கும் ஆகாரம் கொண்டு வருமாறு அவள் உத்தரவிட்டாள்.

பணிப் பெண் அங்கிருந்து சென்றதும் சித்திரலேகா ஆஸனம் வைத்திருந்த

கூஜாவைப் பக்கத்தில் எடுத்து வைத்துக் கொண்டாள். பிறகு, தான் பானம் அருந்தியதும் ஒரு கோப்பை பானத்தை எடுத்துச் சுவேதாங்கனுக்குக் கொடுத்தாள். சுவேதாங்கன் அங்கு வந்த சிறிது காலத்துக்குள்ளாகவே பானம் பருகத் தன்னை நன்றாகப் பழக்கிக் கொண்டுவிட்டான். ஆகவே அவனும் அந்தக் கோப்பையைக் காலி செய்து கீழே வைத்தான். சித்திரலேகா சுவேதாங்கனைப் பார்த்துச் சொல்லலானாள்:—"சுவேதாங்கா! நான் ஆதிமுதற்கொண்டே உன்னிடம் நட்புரிமை பாராட்டி வந்திருக்கிறேன். நீ எனக்கு மிகவும் வேண்டியவன். வேண்டியவர்களிடத்தில் ரகசியம் என்று ஒரு விஷயத்தை ஒளித்து மறைத்து வைப்பது சரியல்ல. இது உனக்குத் தெரியாத விஷயமும் அல்ல; புதிதாகச் சொல்ல வேண்டிய விஷயமும் அல்ல."

சித்திரலேகா சொன்ன இந்தச் சொற்களைக் கேட்டதும், சுவேதாங்கனுக்கு உச்சி குளிர்ந்து விட்டது. எப்பொழுதுமே சித்திரலேகா அவனுடன் நட்புரிமை பாராட்டி, அவனையும் தனக்கு மிக வேண்டியவர்களில் ஒருவனாகப் பாவித்து வந்தாள். ஆயினும் சுவேதாங்கன் அவளைத் தன் எஜமானிக்கு ஒப்பாகக் கருதியே நடந்து வந்தான். "அம்மா, நான் தங்கள் கருணைக்காகத் தவம் கிடப்பவன். தாங்கள் பெரிய மனது பண்ணி என்னையும் வேண்டியவர்களில் ஒருவனாக நினைப்பதென்றால் அது என்னுடைய பாக்கியம்தான்!" என்று மிகவும் பவ்யமாகச் சொன்னான்.

சித்திரலேகா சுவேதாங்கனின் கையைப் பற்றிக்கொண்டு, "சுவேதாங்கா! உன்னிடம் ஒரு விஷயம் சொல்லப்போகிறேன். அந்த ரகசியத்தை யாரிடமும் சொல்லிவிட மாட்டாயே?" என்றாள்.

"யாரிடமும் சொல்லவில்லை என்று சத்தியம் வேண்டுமானாலும் செய்யத் தயார்" என்றான் சுவேதாங்கன்.

"ஆமாம், அதன் விஷயமாக எனக்கு ஒரு ஒத்தாசை செய்வாயா?"

"என்னால் ஆனதை எப்பொழுதுமே செய்யச் சித்தமாயிருக்கிறேன்" என்றான் சுவேதாங்கன்.

(தொடரும்)

## கல்லைப் பொறுக்கினார்!




சட்ட சபையில் அங்கத்தினர் ஒருவர் "ரேஷன் அரிசியில் கல் அதிகமாயிருக்கிறது பற்றி உணவு மந்திரி என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகிறார்?" என்று கேட்டார். உணவு மந்திரி இப்படி நேரடி நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம் அல்லவா?

# உங்கள் (தேக) ஆரோக்கியத்தை

# பருகுங்கள்




போர்ன்-வீடா பாலை விடச் சிறந்தது, அதில் சக்தி தரும் விடமின்களும், கால்ஷியமும் அடங்கியுள்ளன. விளையாட்டுக்காரருக்கும் பலஹீனருக்கும் ஒருங்கே இன்றியமையாதது. குழந்தைகள் அதன் சாக்லேட் மணத்தை விரும்புவர். காலையிலும் இரவிலும் சூடாகவோ அல்லது குளிர்ந்த பானமாகவோ, ஒரு கிளாஸ் பாலுடன் இரண்டு தேக்கரண்டியளவு சேர்த்துப் பருகவும்.




—ஆரோக்கிய விருக்ஷம்—




CFY 2 TAM

## காட்பரீஸ்

# போர்ன்-வீடா

கால்ஷியமும், ஏ & டி விடமின்களும் நிறைந்தது

**காட்பரி-ப்ரை (இந்தியா) லிமிடெட்**

[illegible] பெட்டி நெ. 1417 பம்பாய் [illegible] பெட்டி நெ. 331 கல்கத்தா [illegible] பெட்டி நெ. 1725 [illegible]



# வட்ட மேஜை



## ★ வாழ முடியுமா?

நெசவாளன் காலையிலிருந்து மாலைவரை சளியாது, அடுத்த ஆணியும் அறைந்த மூளை மாய்ச் சற்றுமே திரும்பிக்கூடப் பாராது தறியே தஞ்சமென உழைத்தால் கிடைக்கும் தினக்கூலி எட்டு அணாதான். மாதம் பூராவும் தொழில் செய்ய வசதி ஏற்படாது. பாவு சம்பந்தப்பட்ட (சைஸிங் & டெஷ்டிங்) இவ் வேலைகளிலும் இவர்கள் அனுஷ்டிக்கும் மாதாந்திர லீவும் (கார்த்திகை) சேர்ந்து மாதம் ஒன்றுக்குக் குறைந்தபட்சம் 5 நாட்களாவது கட்டாயம் கழிவு ஏற்படத்தான் செய்யும். டிசைன், பேட்டு மாற்றினால் பாவு ஒன்றுக்கு இரண்டு நாட்களாவது நிச்சயமாய்க் கழிவு ஏற்படும். மாதம் சராசரி 20 நாட்களுக்கு மேல் தொழில் செய்ய முடியாது. வருடம் ஒன்றுக்குச் சராசரி 20 பாவுதான் நெய்ய முடியும்.

(ஒரு பாவு என்பது 112 கெஜம்—216 முழம்)

செலவு விவரம்

| | | | |
|---|---|---|---|
| 1. நூல் (கண்டைக) சுற்றக் கூலி கண் 1-க்கு 0-0-9 விதம் 30 | 1 | 6 | 6 |
| 2. பாவு ஆள் ஓடக் கூலி | 1 | 0 | 0 |
| 3. பசை மாவு ஒன்றரை வீசைக்கு | 1 | 2 | 0 |
| 4. பசை காய்ச்ச விறகு | 0 | 6 | 0 |
| 5. கடலை எண்ணெய் கால் படிக்கு | 0 | 10 | 0 |
| 6. பாவு 1-க்குச் சாதி மகமை | 0 | 8 | 0 |
| 7. பாவு 1-க்கு ஆள் போட்டுப் பாவு ஆற்ற கூலி (சைஸிங் செலவு) | 3 | 8 | 0 |
| 8. பாவு சேரலில் சுற்ற (பீம் பண்ண) | 0 | 12 | 0 |
| 9. பாவு பிணைக்க (டெஷ்டிங் செலவு) | 0 | 12 | 0 |
| 10. ஊடை நூல் சுற்றக் கண் 1க்கு 0-0-6 விதம் பாவு 1-க்கு | 1 | 4 | 0 |
| மொத்த செலவு ரூ. | 11 | 4 | 6 |

| | | | |
|---|---|---|---|
| வருடத்திற்கு 20 பாவு: 1 மாதம் சராசரி ஒன்றரை பாவுதான். கஜம் ஒன்றுக்கு 0-2-9 செலைட்டி கூலி. 112 கஜம் கொண்ட பாவுக்குக் கூலி | 19 | 3 | 3 |
| 112 கஜம் கொண்ட பாவுக்கு மொத்தச் செலவு ரூ. | 11 | 4 | 6 |
| செலவு நீக்கிக் கிடைக்கும் ரூ. | 7 | 14 | 9 |
| 56 கஜம் கொண்ட 1/2 பாவுக்குக் கிடைக்கும் லாபம் ரூ. | 3 | 15 | 6 |
| மாதம் 1க்கு ஒன்றரைப் பாவு ரூ. | 11 | 13 | 3 |

எந்தத் தனி மனிதனாவது இந்த வருவாயை வைத்து வாழ வகையுண்டா? கிழத் தாயும், கால் நோயும் கொண்ட மனைவியும், சதா இருமலும் சீக்குமாய் உயிருக்கு எமனிடம் போராடும் குழந்தையையும் கொண்ட நெசவாளி இந்த ஊதியத்தை வைத்துக் கொண்டு என்ன காரியம் செய்வான்? கணக்குப் பொய் எனக் கூற யாருக்கும் நாவு கூசும்.

அந்தோ! புருஷனும் மனைவியும் மட்டும் சொந்த வீட்டில் வசித்தாலும்கூட இந்த வருவாயைக் கொண்டு வாழ முடியுமா? இந்தப் புள்ளி விவரம் தெரியுமா, தொழில் மந்திரிக்கு? ஆலோசனையும் புள்ளி விவரமும் தெரிந்த பிரதிநிதிதான் உண்டா, மந்திரி சபையில்? கைத்தறி சம்பந்தப்பட்ட எல்லாக் கருவிகளின் பெயர்களும் அதன் உபயோகமும் தெரியுமா? அவைகளைப் பற்றிக் காதாலாவது கேட்டதுண்டா? கண்ணால்தான் பார்த்ததுண்டா? அதிகாரிகளுக்குத் தெரியுமா, நெசவாளியின் கஷ்டம்? மானத்துக்குப் பயந்து தூரத் தொலைவில் முக்காடிட்டுக் கொண்டல்லவா பிச்சை எடுக்கிறான் நெசவுத் தொழிலாளி?

அருப்புக்கோட்டை
21—11—49 ஆர். எஸ். மணி

○●○

## காரியம் செய்வோம்!

1944 முதல் சென்னை மாகாணத்தில் நீண்ட கால, குறுகிய கால நீர்ப்பாசனத் திட்டங்கள் பல வகுக்கப்பட்டன. வேலைகளும் நடைபெறுகின்றன. கோடிக் கணக்கான ரூபாய் சமுத்திரத்தில் மழை பெய்வது போல், வளமுள்ள ஜில்லாக்களிலேயே செலவிடப்படுகிறது. சென்னை மாகாணத்திலுள்ள 26 ஜில்லாக்களில் மிக மிக அஞ்ஞானதசையிலும், வறுமையிலும் மூழ்கிக் கிடப்பது இராமநாதபுரம் ஜில்லாதான். இதை சர்க்கார் அறிக்கைகளிலிருந்தே அறியலாம். மழை பெய்தால் உண்டு, இன்றேல் விவசாயம் இல்லை. 1946—47-ம் ஆண்டில் இராமநாதபுரம் ஜில்லாவில் விவசாயம் செய்த ஏக்கர்கள், 11,16,241. அதே வருடத்தில் தரிசாகக் கிடந்தது 11,77,224 ஏக்கர்கள். பாதிக்குமேல் தரிசாகக் கிடந்திருக்கிறது. விவசாயம் செய்ததாகக் கூறும் ஏக்கர்களில் 4-ல் 1 பங்குதான் விளைந்திருக்கும். மற்ற நிலங்கள் மழையின்மையினால் தரிசாகப் போயிருக்கும். 1947-ம் ஆண்டு முதல் மக்கள் பிழைப்பை வேண்டி வேறு ஜில்லாக்களுக்கும் போகும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது. இவ்வளவிருந்தும் இராமநாதபுரம் ஜில்லாவில், ஒரு நீர்ப்பாசன வேலை கூட ஆரம்பிக்காததற்குக் காரணம் என்ன? கிணற்றுக்கு மானியம் அளிக்கின்றனர். அதுவும் ஏதோதானோ என்றுதான் நடக்கிறது. இருந்தும் கிணறுகளுக்குத் தண்ணீர் இறைக்க எலெக்ட்ரிக் சப்ளை வேண்டுமென்றால் அதுவும் கிடைப்பதில்லை. ஓயாமல் மந்திரிகள் "உணவுப் பொருள்களை உற்பத்தி செய்யுங்கள்" என்று காரடியாகக் கத்துவதைப் பத்திரிகைகளில் படிக்கின்றோம். பருவ மழையே எப்பொழுதும் பெய்யாத வானம் பார்த்த பிரதேசத்தில் எப்படி விவசாயத்தை விருத்தி செய்வது? இராமநாதபுரம் ஜில்லாவில் பத்துக்கு மேற்பட்ட காட்டாறுகள் ஓடிக்கொண்டிருக்கின்றன. அவற்றை அணைகள் மூலம் தடுத்து விவசாயத்துக்கு உபயோகிக்க வேண்டும்.

காவடிப்பட்டி
25—10—49 கொ. நா. சுப்பையா நாயுடு

## ★ யாரிடத்தில் முறையிடுவோம்?

ஒரே அசோகவனமாக இருந்த இலங்கையில் இந்தியர் வந்து காட்டை அழித்து, தேயிலை, ரப்பர்த் தோட்டங்கள் உண்டாக்கி பொன் விளையும் பூமியாய் மாற்றினார்கள். ஆனால், இன்று அவர்களுக்குப் பிரஜா உரிமை இல்லை; வோட்டுரிமை மிகத் தந்திரமாய் தடை செய்யப்பட்டு வருகிறது; தங்கள் மனைவி மக்களுக்குப் பணம் அனுப்ப முடியாது; அவசர அலுவல்களுக்காக இந்தியாவுக்குப் போய் வர முடியாது. எத்தகைய உத்தியோகங்களானாலும் சரி, 25 சத விகிதத்திற்கு மேல் இந்தியர் இருக்கக் கூடாது. இன்னும் எத்தனையோ இடையூறுகள்.

நான் வேலை செய்யும் தோட்டத்தில், சுமார் 1600 தமிழரும், 50 சிங்களவரும் தொழிலாளிகளாக இருக்கிறார்கள். இந்த 50 சிங்களவரும் 10 தமிழர் செய்யும் வேலையைக்கூடச் செய்ய மாட்டார்கள். மாதத்தில் 26 நாட்கள் வேலை கொடுக்கப்பட்டால், 10 அல்லது 12 நாட்கள்தான் வேலை செய்வார்கள். மழை பெய்வதற்கான அறிகுறிகள் இருந்தால் போதும், கதவைத் திறக்க மாட்டார்கள். ஆனால் தமிழரோ, மழையென்றும் வெயிலென்றும் பாராமல் தினம் 8 மணி நேரம் வியர்வை சிந்த வேலை செய்கிறார்கள். இவர்கள் இப்படி வேலை செய்வதால், முதலாளிகளுக்கு மிகுந்த ஆதாயம் கிடைக்கிறது. அதில், பாதிக்கு மேல் சர்க்கார் வரி போட்டு வசூலித்துவிடுகிறார்கள். சுருங்கக் கூறின், இலங்கை அரசாங்கம் நடப்பதே இந்தியத் தொழிலாளிகளின் வியர்வையால்தான்.

உத்தியோகத் துறைகளில் வேலை பார்ப்பவர்களைப் பார்த்தால் அதிலும் தமிழர் சிங்களவரைக் காட்டிலும் இரட்டிப்பாக உழைக்கின்றனர். பக்கத்து ஆபீசில் தலைமைக் குமாஸ்தாவாயிருந்த தமிழர் ஒருவர் ஓய்வு பெற்றார். அவருக்கு உதவிக் குமாஸ்தா ஒருவர்தான் இருந்தார். பிறகு தலைமைக் குமாஸ்தா பதவிக்கு ஒரு சிங்களவர் வந்தார். அவர் வந்து 3 மாதங்களுக்குள், இரண்டு உதவிக் குமாஸ்தாக்கள் கூடுதலாக எடுக்கப்பட்டனர். இப்போது இருவர் செய்தவேலையை நால்வர் செய்கின்றனர்!

இலங்கையில் கலாசாலைப் படிப்புள்ளவர்கள் குறைவு. படித்தவர்கள் அரசாங்கத்தில் பெரிய உத்தியோகங்களைத் தேடிச் செல்லுகின்றனர். ஆகையால் பள்ளிக்கூடங்களில் கற்பிப்பதற்குத் தகுந்த உபாத்தியாயர் கிடையாமல், இந்தியாவிலிருந்து நூற்றுக்கணக்கான பீ. எஸ்ஸி., எம். எஸ்ஸி. போன்ற பட்டதாரிகள் வருடந்தோறும் இலங்கைப் பள்ளிக்கூடங்களில் பதவி ஏற்கின்றனர். இவர்கள் மூன்று வருடங்களுக்கென 'டெம்பரரி'யாய் எடுக்கப்பட்டு, எத்தனையோ மூன்று வருடங்கள் கூட்டிக் கொடுக்கப்படுகிறது. அவர்களை நினைத்தபோது வெளியே தள்ளுவதற்கே இந்தத் தந்திரம். இன்னும் அரசாங்கத்தில் பல பொறுப்பான உத்தியோகங்களுக்குத் தகுந்த ஆட்கள் இல்லாமல் இந்தியாவிலிருந்து அவர்கள் கேட்கும் சம்பளம், ஏனைய வசதிகள் எல்லாம் கொடுத்து ஆட்கள் எடுக்கிறார்கள். ஆனால் இலங்கையிலேயே பிறந்து வளர்ந்து, இலங்கையில் உத்தியோகம் பார்ப்பவர்களை விரட்டுகிறார்கள். இவர்களில் பெரும் பாலோர் இந்திய மண்ணைக் கனவிலும் கண்டிராதவர்கள்.

இலங்கையிலுள்ள இந்தியரில் பதினாயிரத்தில் ஒருவருக்குக்கூட பிரஜா உரிமை கிடைப்பது சந்தேகம். 8 லட்சம் இந்தியரில் அதிகப்பட்சம் 150 பேருக்கு இந்த 2 வருட காலத்தில் பிரஜா உரிமை வழங்கப்படலாம். பிரஜா உரிமை இல்லாத இந்தியரெல்லாம் தற்கால வாசி,- அல்லது நிரந்தரவாசி என்று பதிவு செய்து கொள்ள வேண்டும். தற்கால வாசிகளுக்கு 29-ம் நம்பர் பாரத்தில் அபேட்சித்தால் பிச்சை யிட்டதுபோல் கொஞ்சம் பணம் அனுப்பப் பெர்மிட் கொடுப்பார்கள். ஆனால் அவர்கள் இந்தியா போய்த் திரும்பி வரும்போது அவர்கள் 'பாஸ் போர்ட்'டில் ஆறு மாதத்திலிருந்து இரண்டு வருடங்களுக்குள்ளான ஒரு காலத்தைக் குறிப்பிடுவார்கள். பிறகு அதில் குறிப்பிட்டுள்ள கால அளவு மட்டுமே அவர்கள் இலங்கையில் இருக்க அனுமதிக்கப்படுவார்கள்.

நிரந்தரவாசி என்று பதிவு செய்தால், இந்தியாவிற்குப் போய் வரலாம். ஆனால் ஒரு காசு கூட இந்தியாவிற்கு அனுப்ப முடியாது.

இலங்கையிலேயே எத்தனையோ தலைமுறையாய்ப் பிறந்து வளர்ந்து இந்திய மண்ணைக் கனவிலும் கண்டிராத லட்சக்கணக்கான தொழிலாளிகளும், ஏனையோரும் இலங்கையில் சுதந்திரம் பறிக்கப்பட்டு அடிமையாய் உழைத்துச் சாக வேண்டியதுதானா?

லட்சக் கணக்கில் பணம் முடக்கி வியாபாரம் செய்யும் இந்திய வர்த்தகர்கள், தங்கள் செல்வங்களை இந்நாட்டவர்களுக்கு அர்ப்பணம் செய்துவிட்டு, நடுக் கடலில் தவம் செய்ய வேண்டியதுதானா?

எங்களுக்கு இழைக்கப்பட்டிருக்கும் கொடுமைகளை யாரிடத்தில் முறையிடுவோம்?

இலங்கை
9—11—49

ஜீ. எச். ஆரிஸ்



கச்ச வேஷ்டிக்காரர்:—'ஸாரி' தெரியாமல் காலை மிதித்து விட்டேன், மன்னிக்கவேணும்.

அடிபட்டவர்:—காலை மிதித்ததை மன்னிக்கிறேன். ஆனால் என் மனைவியின் காது கேட்க 'ஸாரி' என்ற வார்த்தை சொன்னதை மன்னிக்க முடியாது.

○●○

## பல சரக்கும் சர்க்காரும்

காவேரி, தென் பெண்ணை, முதலிய நதிகள் ஓடி வளமும் சீரும் சிறப்புமாயிருக்கும் தமிழ் நாட்டில் தற்சமயம் பலசரக்கு வியாபாரிகளின் கொடுங்கோல் ஆட்சி தாண்டவ மாடுகிறது. ஒவ்வொரு பலசரக்கும் அதாவது உப்பு, புளி, மிளகாய் முதல் வெல்லம், கருப்

பட்டி, சீனி வரைக்கும் உள்ள பொருள்கள் ஒன்றுக்கு மூன்று மடங்காகவும் நாலு மடங்காகவும் விலையில் உயர்ந்திருக்கிறது. மணிக்கு ஒரு விலையாக மாறிக் கொண்டு வருகிறது.

மிளகு விலை முன்பு வீசை ரூ. 3 ஆகவும் ரூ. 10 ஆகவும் இருந்தது. கொஞ்சம் கொஞ்சமாக உயர்ந்து இன்று ரூ. 23 ஆகவும் ரூ. 25 ஆகவும் இருக்கின்றது. மிளகாய் வீசை விலை ரூ. 1—8—0 ஆகவும் இருந்தது. இப்பொழுது ரூ. 4 ஆக உயர்ந்திருக்கிறது. இதே போன்று கருப்பட்டி வீசை ரூ. 0—8—0 ஆக இருந்தது கொஞ்சம் கொஞ்சமாக உயர்ந்து வீசை ரூ. 1—4—0 ஆக இருக்கிறது. மல்லி ரூபாய் ஒன்றுக்கு 6 படியாக இருந்தது. இன்று 2 படியாக இருக்கிறது.

அரசாங்கத்தின் மந்திரிகளும், உணவு மந்திரியும் என்ன செய்கிறார்கள்? இவ் விலை ஏற்றம் அவர்கள் கண்களுக்கு ஏன் புலப்படவில்லை? அவர்களும் நம்மைப் போன்று கடை கடையாக அலைந்து உணவுப் பொருள்களை வாங்கினால் அல்லவா தெரியும்? நாட்டின் மக்கள் ஒவ்வொரு பொருளுக்கும் அதிக விலை கொடுத்து வாங்க முடியாமல் தவிப்பதைக் கவனியாமல் அரசாங்கம் வேறு காரியங்களில் ஈடுபட்டிருப்பது அநீதம் என்றே சொல்ல வேண்டும்.

தற்சமயம் நம் மாகாண அரசாங்கத்தின் மீது ஜனங்கள் ஆத்திரமாக இருக்கிறார்கள். இவ்வாத்திரம் எதில் வந்து முடியுமோ தெரியவில்லை. பணக் கொள்ளையும் நகைக் கடை சூறையும் அடிப்பதைப் போன்று இப் பலசரக்கு மளிகைகளையும் கொள்ளையடிக்க ஜனங்கள் தயங்கமாட்டார்கள் என்று சந்தேகப்படுகிறேன்.

---

# பிச்சை வேண்டாம்!



டாக்டர்:—இங்கே பிச்சையுமில்லை, ஒன்றுமில்லை! போ!

பிச்சைக்காரன்:—எனக்கும் பிச்சை வேண்டாம், டாக்டர்! 'பி' விடமின் மாத்திரை நாலு போடுங்க!

பலசரக்குகளின் விலை உயர்வுக்குக் காரணம் என்ன? மிளகு, மிளகாய், கொத்தமல்லி, கருப்பட்டி இவைகள் அந்நிய நாட்டிலிருந்து இத் தேசத்துக்கு வருகின்றனவா? இல்லை. இங்கிருந்து வேறு அந்நிய தேசங்களுக்கு ஏற்றுமதியாகின்றனவா? அதுவும் இல்லை. பின் ஏன் இவ்வாறு விலைகள் அதிகமாக வேண்டும்? இப் பொருள்களின் உற்பத்தி குறைவா? அல்லது இருப்புதான் குறைவா? அதுவும் இல்லை. ஆகையால் கடைக்காரர்கள் உணவுப் பொருள்களைப் பதுக்கிவைத்து ஜனங்களைக் கொள்ளையடிக்கிறார்கள் என்றுதான் சொல்ல வேண்டும். கள்ள மார்க்கெட் முதலாளிகள் அரசாங்கத்தைக் 'காக்காய்' பிடித்து இந்த உணவுப் பொருள்களின்மீது கட்டுப்பாடு வராமல் தடுத்துவருகிறார்கள் என்றே அபிப்பிராயப்பட வேண்டியிருக்கிறது. ஆண்டவனே இதற்கொரு வழி பிறக்காதா? சர்க்காரின் கண்கள் திறக்காதா? கள்ள மார்க்கெட் ஒழியாதா?

மதுரை
13—11—49

பி. எஸ். பாஸ்கரன்

[சர்க்கார் மிளகுக்கு ஏற்றுமதி வரி விதித்திருப்பதினால் மிளகு விலை இப்போது குறைந்து வருகிறது. — ஆசிரியர்.]

○●○

## நாணயக் கட்டுப்பாடு

இலங்கை நாணயக் கட்டுப்பாடு விதிகளில் டிவிஷனல் ரெவினியூ ஆபீஸர்களின் அத்தாட்சிப் பத்திரமின்றி இந்தியாவில் நிரந்தர வாசிகளாக வசிக்கும் எங்கள் குடும்பத்தினர்களுக்குப் பணம் அனுப்ப முடியாது. இந்தச் சட்டம் தற்சமயம் இங்கு அமுலிலிருந்து வருவது யாரும் அறிந்ததாகும்.

இத்தகைய சூழ் நிலையில் நாங்கள் டிவிஷன் ரெவினியூ ஆபீஸர்களுக்கு அனுப்பி வைக்கும் 29ம் நெம்பர் பாரங்கள் மாதக் கணக்கில் மேற்படி ஆபீஸ் காரியாலயங்களில் அநாதைகளாய் அவதிப்படுகின்றன.

இந்த மேற்குறித்த 29ம் நம்பர் பாரத்தை அத்தாட்சி செய்வதற்குக் கோர்ட்டு பீஸ் அணா 12 முத்திரையாய் மனுதாரரிடமிருந்து வசூலிக்கப்படுகின்றது. இவ்விதம் பரம ஏழைகளாகிய எங்களிடமிருந்து அணா பன்னிரண்டு வசூலித்தபோதிலும் எங்களுக்கு ஆகவேண்டிய காரியமாவது குறித்த காலத்தில் நிறைவேற்றி வைக்கப்படுகிறதா என்று பார்த்தால் அதுதான் இல்லை.

ஒரு மனுதார் தம் பாரத்தை எழுதி அதை டிவிஷனல் ரெவினியூ ஆபீசருக்கு அனுப்பி வைத்தால் அந்த பாரம் பலதரப்பட்ட உத்தியோகஸ்தர்களின் தயவுக்குப் பாத்திரமாக வேண்டியிருப்பதோடு, சில பாரங்கள் பல மாதங்களாக இருந்த இடத்தை விட்டு நகராமலும் இன்னும் சில இருந்த இடம் தெரியாமலும் மற்றும் பல கைமோசமாகாமலும் இருந்து விடுகின்றன.

இது போகக் கைமோசம் வைக்கப்பட்ட பாரங்கள் சில சமயம் மனுதாரருக்கு நேரிலும் இன்னுமொரு சமயம் மனுதாரரின் இந்திய விலாசத்திற்கும் வேறு ஒரு சந்தர்ப்பத்தில் இலங்கை நாணயக் கட்டுப்பாடு அதிகாரிக்கும் அனுப்பப்பட்டு வருகின்றன. இவ்விதம் ஒழுங்கற்ற முறையில் அனுப்பப்படும் பாரங்கள் குறித்த காலத்தில் எங்களுக்கு (மனுதாரர்களுக்கு)க் கிடைக்காமல் போவதால் எங்கள் மனைவி மக்களுக்கும் தாய் தந்தையர்களுக்கும் நாங்கள் செய்ய

வேண்டிய கடமைகளை நிறைவேற்ற முடியாமல் போகிறது. இந்த வகையில் ஏற்படும் காலதாமதத்தால் கட்டுப்பாடு அதிகாரியிடமிருந்து நியாயமாகக் கிடைக்க வேண்டிய தொகையிலும் ஒரு வெட்டு ஏற்பட்டு வருகின்றது. ஆகவே, இலங்கை அரசாங்கம் இதைக் கவனித்து உதவ வேண்டும்.

கொழும்பு
17—11—49

ஸ்ரீ மைக்கேல் முதலிய 222 பேர் இந்தக் கடிதத்தில் கையெழுத்திட்டிருக்கிறார்கள்.

○●○

## சிப்பந்திப் பெருக்கம்

“கல்கி”யின் 13–11–49ம் தேதி இதழ் வட்டமேஜையில் “உற்பத்தி பெருகுமா?” என்ற தலைப்பில் வெளிவந்த என் 24–10–49 ம் தேதி கடிதத்தின் நகல்களை அன்றைய தினமே தாலுக்கா சப்ளை ஆபீஸர் முதல் மாகாணத்தின் சப்ளை கமிஷனர் வரையிலும், சட்டசபை மெம்பரிலிருந்து ஜில்லா கலெக்டர், உணவு மந்திரி வரையிலும் அனுப்பி உதவி கோரினேன். இதற்கு முந்திய சம்பவம் நடந்த மறுநாள் 20–10–49 ம் தேதி யன்றே D. S. O. அவர்களிடம் நேரில் அத்தியாவசியமான சாகுபடி செலவுக்கு வைத்திருந்த நெல்லைப் பறிமுதல் செய்ததால் எனக்கு ஏற்படும் கஷ்டங்களை விவரித்து எழுதி உடனே பரிகாரம் செய்யும்படி கேட்டுக்கொண்டேன். அவர் மிகுந்த அனுதாபத்துடன் கேட்டுக்கொண்டு, உடனே இது சம்பந்தமான ரிபோர்ட்டுகளை அவசரமாக அனுப்பும்படி T. S. O. அவர்களுக்கு ஒரு தாக்கீது எழுதி என்னிடம் கொடுத்து அவரிடம் சேர்ப்பிக்கச் சொன்னார். நான் அந்த உத்தரவை அன்றையதினமே T. S. O. விடம் கொண்டு சேர்த்து விட்டேன்.

சம்பவம் நடந்து இருபது நாளைக்குப் பிறகும் எனக்கு யாதொரு பரிகாரமும் அளிக்கப்படவில்லை. என் விவசாயம் முறிந்து போகும் தறுவாயிலிருந்தது. ஆகவே, நான் ஜில்லா கலெக்டரை நேரில் சந்தித்து விஷயத்தின் முக்கியத்துவத்தை விளக்கிப் பரிகாரம் கோரினேன். அவர் உடனே D. S. O. அவர்களுக்கு என் 'ஸ்டேட்மெண்ட்' பிரகாரம் அதிகாரிகள் நடந்து கொண்டிருந்தால், அது ரொம்பப் பிசகான காரியம் என்றும் விசாரித்து முடிவு செய்யும்படியும் உத்தரவிட்டார். மேற்படி உத்தரவை நானே D. S. O. அவர்களிடம் அன்றைய தினம் கொடுத்து விஷயம் ரொம்ப நெருக்கடியாக இருக்கிறது என்றும் நியாயமான விசாரணை உடனே நடத்தவேண்டும் என்றும் கூறினேன். அது சம்பந்தமான தகவல்கள் தம் கைக்குக் கிடைத்த பிறகு தான் ஒரு முடிவுக்கு வர முடியும் என்றும் சொல்லிவிட்டார்.

அவர் அனுப்பிய தாக்கீதுக்குப் பிறகு 29–10–49 ம் தேதி அதிகாரிகள் ஊருக்கு வந்து என் வீடு பக்கத்து வீடுகள் இவைகளைச் சோதனை போட்டும், எனக்குத் தெரியாமல் என் பண்ணை ஆட்கள் பண்ணைகள் வீடுகளையும் சோதனை போட்டும் இன்னம் அவர்கள் சக்தி, புத்தி இவைகளை யெல்லாம் உபயோகித்தும் கிராமத்தில் அக்கப்போர் விசாரித்தும் தாங்கள் தேடிவந்த குற்றங்களுக்கு ஒரு ஆதாரமும் கிடைக்காமல் திரும்பிப்போய் விட்டார்கள். நான் ரிப்போர்ட் செய்து இருபது நாளாகி விட்டதென்றும் என் சம்பள ஆட்கள் கையிலுள்ள நெல்லைப் பறிகொடுத்து விட்டு ஏற்கெனவே கள்ள மார்க்கெட்டில் தானியம் வாங்குகிறார்கள் என்றும் இது ரொம்ப வெட்கப்படத்தக்க விஷயம் என்றும் குறைந்த பக்ஷம் அவர்களுக்கு உடனே ரேஷன் கார்டாவது வழங்காவிட்டால் என் விவசாயத்தைக் கைவிட வேண்டியதுதான் என்றும் இதனால் சுமார் இருபது ஏக்கர் நிலம் தரிசாகப் போய்விடும் என்றும் தெரிவித்தேன். அதற்கும் பலன் கிடைக்கவில்லை.

சென்ற மாதம் பிரதேச உணவு டைரக்டர் ஸ்ரீ குற்றாலலிங்கம் பிள்ளை அவர்கள் பத்திரிகைகளில் வெளியிட்ட அறிக்கையில் “தீவிரக் கொள்முதல்” முறைதான் சிறந்தது என்றும் இதனால் விவசாயிகளுக்குச் சில சமயம் ஏற்படும் அநீதிகளை மேலதிகாரிகளுக்கு அவ்வப்போது தெரிவித்துப் பரிகாரம் தேடிக்கொள்ள வேண்டுமே ஒழிய இம்முறைக்கு மாறாக 'லெவி முறை'யைக் கோருவது உசிதமில்லை என்றும் சொல்லி யிருக்கிறார். அவர் குறிப்பிட்டிருக்கும் அந்த மேலதிகாரி யார் என்பதை அவர் இச்சமயம் விளக்கி அவர் மூலம் எனக்கு ஏதாவது பரிகாரம் கிடைக்கும்படி செய்தால் நன்றியுள்ளவனாக இருப்பேன். நடந்த சம்பவங்களில் என்னுடைய கட்சியின் நியாயத்தைப் பகிரங்கப்படுத்த இனி கோர்ட்டுகளுக்கு நான் போக வேண்டியதின் அவசியத்தை யாரிலும் தடுப்பார் என்று எண்ணுகிறேன்.

இருபது ஏக்கர் நன்செய் சாகுபடி பெரும்பாலும் சொந்தப் பண்ணை சாகுபடியாக மாதம் 37 கலம் தானியசம்பளம் கொடுத்து, அரசாங்கத்தின் சட்ட திட்டங்களுக்குக் கட்டுப் பட்டு, சர்க்காரின் கணக்குக்கு மேல் இருமடங்கு நெல் அளந்திருக்கும் ஒரு விவசாயி, தன்னிடம் விவசாய கால மத்தியில் 31 மூட்டை நெல் கையிருப்பில், அதிகாரிகளுக்குத் தெரியப்படுத்திய பிறகு, வைத்துக் கொள்வதைக் கேவலம் கள்ள மார்க்கட் காரர்களிடம் பிரயோகிக்க வேண்டிய அவசர நடவடிக்கைகளை எடுத்துக் கொண்டு மிகவும் இழிவானமுறையில் அதைப் பறிமுதல் செய்தது நியாயமல்ல. கீழ் அதிகாரிகளின் இச்செய்கை மேலதிகாரிகளின் கவனத்திற்கு கொண்டு வரும்போது அதிலுள்ள நியாநியாயங்களைப் புரிந்து கொள்ள 3 வார காலம் போதாமல் திண்டாடுவதும் பல கஷ்டங்களுக்கும் ஆளான மேற்படி விவசாயி தன்னிடம் முறையிடும் போது அவன் தன்னைத் தொந்தரவு செய்கிறான் என்று சொல்லிக் கொண்டு அவனுக்குயாதொருபரிகாரம் அளிக்காமல் நியாயம் வழங்குவதில் வீண் காலதாமதம் செய்வதும் காங்கிரஸின் புனித லக்ஷியங்களுக்கு உலை வைக்கும் செய்கையாகும்.

இதை ஒழித்துக் கட்ட 'லெவி' முறை ஒன்று தான் தகுந்த மாற்று என்பதற்கு என் அனுபவம் ஒன்றே போதும். இம்மாற்று முறையினால் உடனடியாக சர்க்கார் சிப்பந்திப் பெருக்கம் ஒழிந்து அவர்களுக்குச் சம்பளமாகவும் அலவன்ஸாகவும் செலவாகும் சில கோடி ரூபாய்கள் மீதமாகும். விவசாயிகள் வீண் தொந்தரவுகளுக்கு ஆளாகாமல் தீவிர சாகுபடியில் சந்தோஷமாக ஈடுபட்டு உணவு உற்பத்தியைப் பெருக்க உதவியதாகும்.

தங்கவரம்
21—11—49 என். ஆர். அகண்டேகவர்

---

★ வட்டமேஜைப் பரிசுத் தொகை ரூ. 25-ஐ “வாழ முடியுமா?” என்ற கடிதம் எழுதிய அருப்புக்கோட்டை ஸ்ரீ ஆர். எஸ். மணிக்கும், “யாரிடத்தில் முறையிடுவோம்?” என்னும் கடிதம் எழுதிய இலங்கை ஸ்ரீ ஜீ. எச். ஆர்ஸாக்கும் ரூ. 12-8-0 வீதம் பிரித்து வழங்கப்பட்டது.

# திட்டம் போடுவோமா?

வஸுமதி

"எனக்கு வரவரக் கவலை அதிகரித்து விட்டது, பத்மா! வரவுக்கு அடங்கின செலவு இருந்தால் அல்லவா நிம்மதி? வரவுக்கும் செலவுக்கும் மலைக்கும் மடுவுக்குமாக இருக்கிறதே! 'செலவு ஏறுமாறாக இருப்பின் கூறுமற் சந்நியாசம் கொள்' என்றுதான் சொல்லவேணும்" என்றான் பத்மாவின் கணவன் ரகுநாதன்.

"இந்த மாதம் வேணும்னு பாருங்கோ, செலவு கட்டி வரும். போன மாதம் சுலோவுக்கு ஜுரம், உங்கள் அக்கா பெண் கல்யாணம், உங்கள் சித்தப்பா வந்திருந்தார். எல்லாம் சேர்ந்து கொண்டது. இந்த மாதம் அப்படி ஒன்றும் அதிகப்படியில்லை" என்றாள் பத்மா.

"என்னவோ பத்மா, எனக்கு நம்பிக்கையில்லை. ஒவ்வொரு முதல் தேதியும் தான் இப்படித் திட்டம் போடுகிறோம். நடப்பது வேறாக இருக்கிறது. இந்திய சர்க்காரின் பொருளாதார நிலைதான் நம் வீட்டிலுமிருக்கிறது. இந்த மாதம் ராமு படுத்துக் கொள்வான். இன்னும் ஏதாவது நேரும்......" என்றான் ரகு.

"போதுமே. முதல் தேதி அன்று அபசகுனம்போல் உளறவேண்டாம். ஒவ்வொரு வீட்டுக் குழந்தைகளைப் போல் நம் வீட்டு குழந்தைகளுக்கு நோய் நொடி இல்லை. நாம் என்ன சிலரைப்போல் டிராமா, ஸினிமா போய்ச் செலவு செய்கிறோமா? எவ்வளவு செட்டும் சிறுமாய்ச் செலவு செய்கிறோம். ஒன்றையும் நான் வீணாக்கவில்லை......"

"பார்ப்போம், எனக்கு நம்பிக்கையில்லை. பத்து ரூபாயாவது நாம் சேமிக்க வேண்டாமா? இப்படியே காலம் போனால் பயங்கரம் தான். எங்கள் தாத்தா சொல்வார் 'செத்தால், வாழ்ந்தால் நான்கு காசு வேண்டாமா' என்று."

"இன்று என்ன இப்படி பேச ஆரம்பித்து விட்டீர்கள்? சேமிப்பதற்குக் கெடுதலையா சொல்லணும்?"

"நெருப்பென்றால் வாய் வெந்து போய் விடுமா? பத்து நாள் ஜுரம் படுத்துக் கொண்டோம் என்றால் பணம் இல்லாமல் என்ன செய்வது?"

"சரியாய்ப் போச்சு; இன்று இம்மாதிரி பேச்சுதான் உங்கள் வாயிலிருந்து வருகிறது. அகவிலை இப்படி ஏறியிருக்கும் பொழுது வருமானம் எவ்வளவு வந்தும் பிரயோஜனமில்லை. முந்நூறு ரூபாய் சம்பளத்தில் வீட்டு வாடகை ஐம்பது ரூபாய் அழனும். எலக்டிரிக் கட்டணம் ஏழு ரூபாய். பால் முப்பது ரூபாய். (பாலில்லை, பால்காரன் விடும் ஜலத்துக்கும் நுரைக்கும்' என்று திருத்தினான் ரகு வெறுப்புடன்) அரிசி, மளிகை சாமான் நாற்பது ரூபாய். விறகு, கரி பதினைந்து ரூபாய். குழந்தைகள் பள்ளிக்கூட சம்பளம் புஸ்தகம் இருபத்தைந்து ரூபாய். இப்படி தாராளமாகச் செலவழித்தால் கூட இருநூறு ரூபாய் ஆகும். மேலே நூறு ரூபாய் இருக்கிறது பார்ப்போம்."

"என்னவோ பத்மா, நீ நம்புகிறாய். எனக்கு அடியோடு நம்பிக்கையில்லை. இதுவரை எந்த மாதமாவது ஐந்து ரூபாயாவது மீதம் செய்திருக்கிறோமா?"

அதற்குள் "அப்பா! எனக்கு இந்த மாதம் பேனா வாங்கித் தருவதாக முந்தியே சொல்லியிருக்கிறாய்" என்று



ஓடிவந்தான் ராமு. "எனக்குப் பொம்மை வாங்கித்தா" என்று ஓடிவந்தாள் கலோ. "எனக்கு அதெல்லாம் வேண்டாம். வக்கீலாத்து குமுதா உடுத்தியிருப்பது போல் பச்சைப் பாவாடை வேணும் அப்பா!" என்றாள் கமலா.

"பார்த்தாயா, பத்மா! உன் குழந்தைகள் கேட்பதை. முதல் தேதி அன்று கையில் காசு இருப்பதால் குழந்தைகளுக்குச் சந்தோஷமாய்ச் செய்து விடுவோம். பதினைந்து தேதிக்கு மேல்தான் கையில் காலணா இராது" என்று அங்கலாய்த்தான் ரகு.

"ஏனப்பா! ஒவ்வொரு மாதமும் பதினைந்து தேதி இருந்தால் போதுமே. அப்படி ஒரு காலண்டர் வாங்கி விடலாம்" என்று அப்பாவின் கவலைக்கு மருந்து சொன்னான் ராமு.

* * *

இன்று பதின்மூன்று தேதிகள் கடந்து விட்டன. இன்னும் பதினேழு நாட்கள்தானே? இந்த மாதம் எப்படியாவது சிக்கனம்செய்து மீதம் செய்து காட்டி விடுகிறேன். பிறகுதான் அவருக்கு நம்பிக்கை பிறக்கும்'—இப்படி பத்மா சிந்தனையிலிருந்தபொழுதே வாசலில் வண்டியிலிருந்து பத்மாவின் மாமாவும் மாமியும் வந்து இறங்கினார்கள். பத்மாவுக்குத் தலை கிறுகிறுத்தது. வந்தவர்களை வரவேற்க நாக்கு மறுத்து விட்டது. மாமா அதை எதிர்பார்க்கவில்லை. "பத்மா! வெகு நாளாய்ப் பட்டணத்துக்கு வரும்படி அழைத்தாயே. உன்னிஷ்டம் பூர்த்தியாய் விட்டது. எங்களை இந்த ஊருக்கே மாற்றி விட்டார்கள். மூன்று நாளில் வேலையை ஒப்புக்கொள்ள வேண்டியிருக்கிறது. அதனால்தான் உனக்கு முன்னால் தெரிவிக்க முடியவில்லை" என்று யந்திரம் மாதிரி பேசிக்கொண்டே போனார். அப்பொழுதுதான் ஸ்நான அறையிலிருந்து வந்த ரகு வந்தவர்களைக் கண்டு அப்படியே அயர்ந்து போனான்.

மாமா பலே பேர்வழி. "என்ன மாப்பிள்ளை ஸார்! நான் இந்த ஊருக்கே வந்து விட்டேன். ஒரு வீடு பார்த்து நீங்கள்தான் கொடுக்கணும். என்னதான் நம் வீட்டில் சுவாதீனமாய் இருந்தாலும் எவ்வளவு நாளைக்கு இருப்பது? சொந்த ஜாகை என்று ஒன்று வேண்டாமா?" என்று ஒரு வெடிகுண்டை வீசினார். பத்மாவும், ரகுவும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

* * *

"படி அரிசி ஒன்னரை ரூபாயானாலும் கிடைத்ததை வாங்கி வாருங்கள். தலைவிதி என்ன செய்வது? வீட்டில் மணி அரிசி கூட இல்லை. வந்தவர்களுக்கு விருந்து செய்யாவிட்டாலும் சாதாரண சாப்பாடாவது போட வேண்டாமா? இவர்கள் வந்து ஒரு வாரமாகி விட்டது. அதிகப்படி ஐம்பது ரூபாய் செலவும் ஆயிற்று" என்றாள் பத்மா கண்கலங்க.

"நீதானே அவர்களை வரச் சொல்லி வெகு நாளாய் அழைத்தாயாம், பத்மா! அன்றே சொல்லவில்லையா? மாமா வராவிட்டால் வேறுவிதச் செலவு. சேமிப்பதில் எனக்கு நம்பிக்கையேயில்லை" என்றான் ரகு.

"நான் ஒன்றும் இவர்களை வருந்தி அழைக்கவில்லை. ஏதோ வாய் வார்த்தைக்குச் சொன்னால் அதை ஸ்தாபிதம் செய்துகொண்டு வந்து விட்டார். காலா காலத்தில் ஒரு வீட்டைப் பார்த்து ஏற்பாடு செய்து அவரை அனுப்ப வழி பாருங்கள்."

"நல்ல வேலை சொன்னாய்! வீடு பார்ப்பது, உன் மாமாவை அனுப்புவது இரண்டும் சுலபமான வேலையா? ஆற்று மணலை எண்ண



லாம். மணலைக் கயிறாகத் திரிக்கலாம். வானத்தை வில்லாக வளைக்கலாம். இந்தச் சென்னையில் குடியிருக்க வீடு தேடுவது சாத்தியமா?" என்றான் ரகு.

*    *    *

"அப்பாடா! இவ்வளவு சீக்கிரம் நீங்களும் வீடு பார்த்து அவர்களும் போவார்கள் என்று நினைக்கவே யில்லை. அறுபது ரூபாய் செலவோடு போச்சு. அடுத்த மாதம் பத்து ரூபாய் சம்பள உயர்வு இருக்கிறது." என்று ஆறுதலடைந்தாள் பத்மா.

"அதற்குள் சொல்லி விடாதே! இந்த மாதம் இன்னும் எட்டு நாள் தள்ளணும்; அடுத்த மாதம் பத்து ரூபாய் ஏறினால் இருபது ரூபாய் செலவும் ஏறுகிறது" என்றான் ரகு.

"செலவு ஆவதிருக்கட்டும், நீங்கள் சொல்வதுதான் எனக்குக் கஷ்டமாக இருக்கிறது. மூன்றாவது வீட்டிலிருக்கும் ராமரத்னமய்யர் சம்சாரம் என்ன ஜவுளி எவ்வளவு நகைகள் வாங்குகிறாள்! பெண்களுக்குக் காலேஜ் படிப்பு. பிள்ளைகளோ அயல்நாட்டுப் பிரயாணம், சமையல்காரர் இரண்டுபேர். இரண்டு மோட்டார், தோட்டக்காரன், ஆள், படை எப்படித்தான் சமாளிக்கிறார்களோ! அப்படிப்பட்ட வருமானம் வருகிறது போலிருக்கிறது" என்றாள் பத்மா.

"ஆனால் பத்மா, ராமரத்னமய்யர்கூடச் செலவுக்குக் கட்டவில்லை யென்றுதான் வருந்துகிறார். அதுதான் விசேஷம்? எவ்வளவு வந்தாலும் அதற்குமேல் செலவு ஏறும்" என்றான் ரகு.

"அப்படியா? ஆச்சரியமாக இருக்கிறதே! அவருக்கு 4000, 5000 வருமானம் என்று சொல்லுகிறார்களே! அப்படி இருந்துமா பணம் போதவில்லை? ஆனால் அவர்கள் ஜலதோஷம் பிடித்தால் டாக்டரைக் கூப்பிட்டு விடுகிறார்கள். அனேகமாய் அரண்மனை வைத்தியம் தான். தினசரி டாக்டர் வருகிறார். நமக்கு இப்படி வருமானம் வந்தால் நான் சேர்த்துக் கோட்டை கட்டி விடுவேன்."

"அதுதானில்லை பத்மா, நீ கட்டுவது மனக்கோட்டை தான். வருமானம் ஏற ஏறச் செலவும் ஏறிக் கொண்டேதான் போகும். அந்த நிலை வந்தால் நாமும் இப்படித்தான் செலவு செய்வோம். நான் இப்பொழுது சொன்னால் நம்ப மாட்டாய். பணமும் வசதியான வாழ்வும் ஏறினால் டாக்டர் பில்லும் தானாக ஏறும்" என்றான் ரகு.

நான்கு நாள் கழித்து பத்மாவுக்குச் சொல்ல முடியாத தலைவலி வந்து விட்டது. கூட ஜலதோஷமும், ஜுரமும் வந்துவிட்டன. டாக்டரிடம் சென்று மருந்து வாங்கிச் சாப்பிடவும் மனமில்லை.

'ஒரு நாளும் எனக்கு இப்படி தலைவலி ஜுரம் வந்ததில்லை, அவர் சொல்வதற்கேற்றாற்போல் இப்படி வருகிறதே. வைத்தியமும், மருந்தும் இப்பொழுது கையிலிருக்கும் பணத்திற்கு உலைவைத்து விடுமே. கமலாவுக்குப் பாவாடை இல்லை அந்தச் செலவைக்கூட ஒத்திப் போட்டேனே!' இப்படிக் கவலையில் பத்மா ஜுரத்தை அதிகரித்துக் கொண்டாள்.

"பத்மா, தடுக்காதே! இவ்வளவு ஜுரத்திற்கு வைத்தியம் செய்யாவிட்டால் பிரமாதமாய்ப் போய் அதிகச் செலவையும் கவலையையும் உண்டாக்கும். நான் போய் டாக்டரை அழைத்து வருகிறேன்" என்று சொல்லிவிட்டு வெளியே போனான் ரகு.

டாக்டர் வந்து நான்குவித மருந்துகள் எழுதிக் கொடுத்தார். ஹார்லிக்ஸ், பழரஸம், தகுந்த ஓய்வு எல்லாம் மிச்சமாக இருக்கும் ரூபாயைக் கரைத்தது. நடுத்தரக் குடும்பத்தினரின் கஷ்ட நிஷ்டூரம் வியாதிகளுக்குத் தெரியக் கூடாதா?

*    *    *

"என்ன பத்மா இந்த மாதம் நாம் வரவு செலவுத் திட்டம் போடுவோமா? ......என்ன மௌனம்?" என்றான் ரகு.

"போதுமே! இனிமேல் திட்டமே போடவில்லை. 'நடப்பது நாராயணன் செயல்' என்று இருந்து விடுவோம். திட்டப்படிதான் ஒன்றும் நடப்பதில்லை. அநாவசியக் கவலையே வேண்டாம். கையில் வந்தபடி செலவுசெய்து விடுகிறேன்" என்றாள் பத்மா.

"அப்படி யெல்லாம் செய்து விடாதே! திட்டம் போட்டாலே இந்தக் கதி வரும் பொழுது கையில் வந்தபடி செலவு செய்து விட்டால் அதோ கதிதான்!" என்றான் ரகு.

"ஆனால் எனக்கு இந்த மாதம் கொஞ்சம் நம்பிக்கையிருக்கிறது. 28 தேதிகள் தானே. ஒரு விதமாய்ச் சமாளிக்கலாம்!"

"பார்ப்போம். நீ நம்பிக்கையை விடாமலே இரு. மலைபோல் செலவு வந்தாலும் மனோ தைர்யத்தை விடக்கூடாது. என்னதான் 15 தேதிக்கு மேல் கஷ்டமாயிருந்தாலும் முதல்தேதி குஷியாகத்தானிருக்கிறது. அல்லவா? சரி, புறப்படு! செலவை மறந்து சினிமாவுக்குப் போவோம்" என்றான் ரகு.




பாலா என் தமக்கை பார்வதியின் ஐந்து வயதுப் பெண். குழந்தை பாலாவை அவளுடைய ஐந்தாவது ஆண்டு நிறைவுக்கு வந்த அன்றுதான் பார்க்கிறேன். அவளுடைய இனிய பேச்சும், குறும்புப் புன்னகையும் அழகிய முகமும் அவள் விளையாட்டும் பார்க்கவும் கேட்கவும் கொடுத்து வைத்திருக்கவேண்டும் என்று தோன்றியது.

என் அக்காவின் கணவர், ஒரு சிமெண்ட் கம்பெனியில் பெரிய உத்தியோகத்திலிருந்தார். அன்று மாலை, அவர் கம்பெனி விஷயமாக வெளியூருக்கு அவசரமாகப் புறப்பட்டார். அவர் ஊருக்குப் புறப்பட்டதால், நான் ஒரு வாரம் என் தமக்கையின் வீட்டில் தங்க நேரிட்டது.

அப்போது மழைக் காலம்; விடாமல் மழை பெய்துகொண்டிருந்தது. தோட்டச் செடிகள் எல்லாம் மகிழ்ந்து மழையை வரவேற்றன. செடி கொடிகளுக்குக் கொண்டாட்டமா யிருந்த மழை ஜனங்களுக்கு உபத்திரவமாக இருந்தது.

பாலா, மழையில் விளையாடினாள். காகிதக் கப்பல்கள் செய்து தரச் சொல்லி என் உயிரை எடுத்து விட்டாள். அவள் முகம் கோணாமல் விளையாட நானும் வேண்டிய மட்டும் கப்பல்களைச் செய்து கொடுத்தேன்.

"மாமா, இரண்டு பேரும் கப்பலிலே போகலாமா?" என்று அவள் கேட்கும் பொழுது யாரும் சிரிக்காமலிருக்க முடியாது.

"பாலா, மழையில் நனையாதே உடம்புக்காகாது" என்று நான் எவ்வளவு சொல்லியும் அவள் கேட்கவில்லை. பாவாடை எல்லாம் நனைத்துக் கொண்டாள். அன்று பூராவும் அவள் அம்மா அவளைக் கவனிக்கவில்லை. நானும் ஒன்றும் சொல்லவில்லை. மறுநாள் காலையும் மழை பிடித்துக் கொண்டது. தோட்டம் பூராவும் நீர் தேக்கம். 'இன்று பாலாவைத் தண்ணீரில் விளையாட விடக் கூடாது' எனத் தீர்மானித்தேன்.

நான் நினைத்த மறுவினாடி பாலா அங்கு வந்தாள். "மாமா, அந்த சூரியகாந்திப் பூவைப் பறிச்சுட்டு வரேன். இன்னிக்குக் கப்பல் விடல்லே" என்றாள். எப்படியாவது தண்ணீரில் போக வேண்டுமென்று துடித்தாள் பாலா.

நான் "அதெல்லாம் முடியாது. பாலா! உள்ளே போய் விடு! அம்மா வந்தா அடிப்பா!" என்றேன். நான் சொல்லி முடிப்பதற்குள் பாலா என்னை அலக்ஷியம் செய்துவிட்டுத் தோட்டத்தில் ஓடினாள். சூரியகாந்திப் பூ அவள் கைக்கு எட்டவில்லை. "பாலா!" என்று கத்திக் கொண்டு பார்வதி வந்தாள். அதற்குள் நான் அவளைப் பிடித்து உள்ளே கூட்டி வந்தேன். சொட்டச் சொட்ட நனைந்திருந்தாள் பாலா.

"மாமா சொன்ன கேட்காம மழையிலே என்ன வேலை, கழுதை?" என்று திட்டியவாறு குழந்தையின் முதுகில் பார்வதி இரண்டு அடி வைத்தாள். அடிக்குப் பின் அழுகை உதயமாயிற்று.

"ஏன் அடிக்கிறாய் அக்கா!" என்று கேட்க என் மனசு துடித்தது. எனினும் நா எழவில்லை. என் நிலை தர்மசங்கடமான நிலையாகிவிட்டது.

* * *

இரவு வந்தது. மழை ஓயவில்லை. பின் இரவு கழிந்தது. அப்போதும் அடை மழை ஓயவில்லை. கண்ணை விழித்தேன். மழையைத் திட்டிக் கொண்டே படுக்கையை விட்டு எழுந்தேன்.

என் பார்வை தோட்டத்தில் சென்றது. சத சதவென இருந்த தோட்டம் தன் களையை இழந்திருந்தது. செடிகளின் குறுநகை அன்று இல்லை. சூரிய காந்திச் செடியைக் கண்டதும் திடுக்கிட்டேன்.

பாழும் மழை அச்செடியைச் சாய்த்திருந்தது. சாய்ந்து ஒடியும் தறுவாயிலிருந்த அது மறுபடியும் துளிர்க்குமோ வென எண்ணி ஏக்கமுற்றது என் மனம்.

உள்ளே இருந்து என் தமக்கை வந்தாள். "ராஜு, பாலாவுக்கு நல்ல காய்ச்சல். பேசக்கூட முடியல்லே. எச்சில் விழுங்கவும் முடியல்லே. கழுத்து வீங்கியிருக்கு" என்றாள் படபடப்புடன்.

உள்ளே ஓடி பாலாவைப் பார்த்தேன். கண் அயர்ந்து வாடியிருந்த அவளிடம் அப்போது குறும்புத்தனமில்லை. மறு விநாடி டாக்டரிடம் ஓடினேன். வழியெல்லாம் குழந்தைக்கு அபாயம் நேரிடாமல் இருக்க வேண்டுமே என ஏங்கியது மனம்.

டாக்டர் வந்து, குழந்தையைப் பரிசோதித்தார். 'டிப்திரியா' என்ற அபாயமான வியாதி பாலாவைப் பிடித்திருக்கிறது என்று அறிந்ததும் என் மனம் 'திக்' கென்றது.

"ராஜு, அத்திம்பேருக்குத் தந்தி அடித்துவிடு. அவர் வரட்டும்" என்றாள் பார்வதி. தந்தி அடித்த பின் சிறிது அவளுக்கு ஆறுதல் ஏற்பட்டது.

இரண்டு இரவுகள் கழிந்தன. மழை நின்று நின்று பெய்து கொண்டிருந்தது. இரண்டு நாட்களுக்குள் பாலாவுக்கு ஆறு தடவை டாக்டர் ஊசி போட்டு அவள் வியாதியுடன் சண்டையிட்டார்.

இரவு நேரங்களில் தூக்கம் கிடையாது. என் மனம் ஏதோ நான் குற்றம் செய்து விட்டேன் என்று இடித்துக் கூறுவது போல் தோன்றியது. 'நீ அவளை மழையில் விளையாட விட்டாய். தாட்சண்யம் பார்க்கலாமா? குழந்தைகள் என்றால் மிரட்டியும் அணைத்தும்தான் வளர்க்க வேண்டும்' என்றது என் மனசு. அவளை அடித்து மிரட்ட அப்போது என் மனம் ஒப்பவில்லையே, அதற்கு நான் என்ன செய்வேன்? 'பின் உன் தமக்கை பாலாவை அடித்த போது நீ ஏன் மனதுக்குள் வருத்தப்பட்டாய்?' என்றது மனசு. இதே மாதிரி போராட்டங்கள் அன்று மனதைக் குடைந்து விட்டன. கங்குல் கரையக் கரைய மனத்தின் சோர்வு குறைந்தது போல் காணப்பட்டது. வைகறைப் பொழுது தூக்கமில்லாததால் எழுந்து தோட்டத்துப் பக்கம் போனேன்.

என் பார்வை சூரியகாந்திச் செடியின் மீது விழுந்தது.

என் கண்கள் ஆச்சரியத்தால் மலர்ந்தன. அச்செடி வாடாமல் துளிர்த்து விட்டது. சிறிது மேலே எழும்பியிருந்தது. அப்போது ஒரு பெரிய சூரியகாந்தி மலரும் விரியும் தறுவாயிலிருந்தது.

கிழக்கே சூரியன் எழும்பினான். அவனைக் கண்டு பசும் இலைகள் வெட்கின. சூரிய காந்தி மலர் மலர்ந்து ஆடியது.

"ராஜு, பாலா உன்னைக் கூப்பிடறா" என்று கூறிக்கொண்டே என் தமக்கை வந்தாள்; நான் உள்ளே ஓடினேன்.

"மாமா, நேக்கு பூ கொடு மாமா, சூரிய காந்தி" என்றாள். "தரேம்மா" எனக் கூறிய நான் அவள் உடம்பைத் தொட்டுப் பார்த்தேன். ஜுரம் குறைந்திருந்தது. உடனே தோட்டத்திற்கு விரைந்து அப்போது மலர்ந்த சூரியகாந்திப் பூவைப் பறித்து அவள் கையிலே கொடுத்தேன்.

அவள் முகம் மலர்ந்தது. அத்துடன் என் உள்ளமும் மலர்ந்தது. என் கண் முன் மலரின் மனமோகனப் புன்னகை உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது.

"ராஜு, அத்திம்பேர் வந்துட்டார்" என்ற குரல் என் சிந்தனையைக் கலைத்தது. நான் எழுந்திருக்குமுன் அத்திம்பேர், "பாலா உடம்பு எப்படியிருக்கிறது?" என்று கேட்டுக் கொண்டே வந்தார்.

"அப்பா!" என்று அழைத்த அவளை அணைத்துக் கொண்டார்.

"இனிமேல் பயமில்லை என்று டாக்டர் சொல்லி விட்டார்" என்று பார்வதி சொன்னாள்.

"பார்வதி, நீ குழந்தைகளைக் கவனிக்கிறதே இல்லை. மழையிலே விளையாடினால் நீ கவனிச்சால்தானே" என்றார்.

"நானா கவனிக்கல்லே? ராஜுவைக் கப்பல் செய்து கொடுன்னு உயிரை வாங்கிவிட்டாள். பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன். கடைசியிலே குழந்தையேன்னு பார்க்க முடியறதா? இரண்டு அடி வைத்து உள்ளே இழுத்து வந்தேன். அவன்கூட ஏண்டா இப்படி அடிக்கிறேன்னு நினைச்சிருப்பான். அவன் மிரட்டுவான்னு பார்த்தேன். அவனுக்கு மனசு வரல்லே. கடைசியிலே நான் தானே இரண்டு அடி கொடுத்து மிரட்டினேன்" என்றாள் பார்வதி.

இவ்விதம் அவளைப் பற்றிச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே, "இந்தா, அம்மா கிட்டே போம்மா!" என்றார் அத்திம்பேர். பாலா ஆவலுடன் தன் தாயை அணைந்து கொண்டாள். என் மனம் மகிழ்ந்தது.

"நான் மழையால் அடிபட்டேன். பிறகு துளிர்த்து விட்டேன். மழையிடம் என் அன்பு குறையவில்லை. எங்களைப்போலத் தான் குழந்தைகளும்" என்று சொல்லிக் கொண்டே, சூரியகாந்திச் செடி காற்றில் தலையசைத்து ஆடியது!




# நல்ல ஆரோக்கியம் குடும்பத்தில் அனைவருக்கும்!





குடும்பத்தில் அனைவரும் தேக சுகத்துக்காக கவலையுள்ள மனம் விரைந்த "ஓவல்டின்" அருந்த வேண்டும் தேகம், நரம்புகளுக்கு வலிமையூட்டுவது அது அதில் பார்லி மால்ட். பால், கொக்கோ, இயற்கை சத்துக்கள் வைட்டமின்கள் உண்டு. அதனால்தான் கவலை இல்லாமல், தினசரி உழைப்புக்கு வேண்டிய சக்திக்காகவும் இரவில் நன்கு தூங்கவும் காலையிலும் மாலையிலும் "ஓவல்டின்" கொடுக்கிறன் போலிகள் விஷயத்தில ஜாக்கிரதை!





# 'OVALTINE'

## 'ஓவல்டின்' குடும்பத்துக்கு சிறந்த பானம்

டிஸ்ட்ரிப்யூட்டர்கள்:

கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிமிடெட், தபால் பெட்டி நெ. 1205, மதராஸ், மற்றும் பம்பாய், கராச்சி, கல்கத்தாவிலும். தி இங்கிலீஷ் & ஸ்காட்டிஷ் ஜாயிண்ட் கோவாபரேடிவ் ஹோல்சேல் சொஸைட்டி லிமிடெட், கள்ளிக்கோட்டை (மலபார் கோஸ்டுக்கு)

ஜகப் பிரசித்திபெற்ற இந்த
டிரேட் மார்க்கை கவனியுங்கள்.



# இன்று
# மிகவும் நேர்த்தியான
# சைகிள்களில்



உலகிலேயே ஏராளமாக
உற்பத்தி செய்யப்படுவது

தி ஹெர்குலஸ் சைக்கிள் அன்
மோட்டார் கம்பேனி லிமிடெட்,
பர்மிங்ஹாம், இங்கிலாந்து



'ஹெர்குலஸ்' மூன்று வேக
ஹப்பை எவ்வித மாடல்களி
லும் பொருத்தலாம். அல்லது
தனியாகவும் கிடைக்கும்.

# ஹெர்குலஸ்
# சைகிள்கள்

**எல்லா பிரபல வியாபாரிகளாலும் விற்கப்படுவது**

HCX/17/4



# விற்பனையாளர் கால்வலியினால் முடமானார்



## பின்பு 'க்ருஷன்' அதன் விளைவை வெற்றிகரமாகத் தாக்கியது

விற்பனையாளர் காந்தி மேல் நாட்டு பிரயாணத்திலிருந்து திரும்பியபோது அவரை ரயிலிலிருந்து தூக்கி வரவேண்டியதாயிற்று. மறுபடியும் வேதனை உண்டாக்கும் கால் வலி அவரை அதிவிரைவில் பிடித்தது. சில நாட்கள் கழித்து எவ்வாறோ காரியாலயத்தை அடைந்து மானேஜரைக் கண்டு அவர் ராஜிநாமாக் கொடுத்தார்......

ஆறு மாதங்களுக்குப் பின்: என்ன மாறுதல். அதிக விற்பனையின் காரணமாக காந்தி கால் வருடப் பரிசைப் பெற்றுவிட்டார். அவரது சகாக்கள் தங்கள் சந்தோஷத்தைத் தெரிவிக்க அவரைச் சூழ்ந்து கொண்டனர்.

"உங்கள் ரகசியம் என்ன?" என்று அவரைக் கேட்டனர்.

"தினம் காலை உண்டிக்கு முன் "க்ருஷன்" சாப்பிடுவதுதான்" அவர் கொடுத்த பதில்.

கால்வலி உபத்திரவம், நரம்புத் தளர்ச்சி இவைகள் சுத்தமற்ற ரத்த ஓட்டத்தின் அறிகுறி. அவைகள் ரத்தத்தில் விஷம் கலந்திருப்பதைக் காண்பிக்கின்றன. 'க்ருஷன்' ஆறுவித இயற்கை உப்புகளின் சேர்க்கையாதலினால் உட் சுத்தத்தை உறுதியாக்கி ரத்த ஓட்டத்தை துப்புரவாக்குகிறது. புதிய பலத்துடன் சுத்தம் செய்யப் பட்ட நீங்கள் புது வீரத்துடன் பரிணமிக்கிறீர்கள். பின்பு கால்வலி நரம்புத் தளர்ச்சி சம்பந்தப் பட்ட நோய்கள் உங்களை விட்டுச் செல்லுகின்றன.

இன்றே 'க்ருஷன்' வாங்குங்கள். கெமிஸ்டுகளிடமும் வியாபாரிகளிடமும் எங்கும் கிடைக்கும். விலை ரூ 1-10 (மஞ்சள் பெட்டியில்.)




## நீங்கள் கூட அந்த 'க்ருஷன்' உணர்ச்சியை அடையலாம்

# நாளுக்கு நாள் உங்கள் சருமம் அதிக அழகைப் பெறுகிறது

**ரெக்ஸோனாவிலிருக்கும் கேடில்தான் உங்கள் சருமத்திற்கு புது ஆரோக்கியமும், புது மலர்ச்சியும், அதிக மென்மையும் அளிக்கிறது.**

தினமும் குறைந்தபக்ஷம் இரு முறையாவது ரெக்ஸோனா உபயோகியுங்கள். கேடில் அடங்கிய அதன் நுரையை மெதுவாக சருமத்தில் தேய்த்துக் கழுவுங்கள். ரெக்ஸோனாவிலிருக்கும் கேடில் சருமத்தை மாசற்றதாக்கி, மழமழப்பும் அழுத்தமும் தரும். மேலும் புது ஆரோக்கியமும், புது எழிலும் பெறச் செய்யும். அத்தகைய அழகு கேடில் அடங்கிய ரெக்ஸோனா தினமும் உபயோகிப்பதனாலேயே நீடித்து நிற்கும்.

# ரெக்ஸோனா

கேடில் அடங்கிய
சோப் இது ஒன்றே




RP 52-172 TM

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk. Madras



# டி.எஸ்.ஆர். கோகுல் ஹேர் ஆயில்




டி.எஸ்.ஆர். கோகுல் கூந்தல் தைலம் அதன் அரிய வாசனைக்கும் அபூர்வ குணத்திற்கும் பெயர் போனது. இது கூந்தலை கருகருவென்று நீண்டு வளரச் செய்வதோடன்றி, மூளைக்கு குளுகுளுப்பையும் அபாரி கருகருப்பையும் அளிக்கிறது.



**டி.எஸ்.ஆர்.&கோ.,**
**கும்பகோணம்.**

சென்னை நகரத்திற்கு சோல் ஏஜண்டு:

ஸுராஜ் ஏஜன்ஸிஸ்
157, வைபிட்ஸ் ரோடு, ராயப்பேட்டை, மதராஸ்

கோவை, பாலக்காடு அண்டு நீலகிரிக்கு
சோல் ஏஜண்டுகள்:

B. பாலபட்டாபி செட்டியார்
246, வைசியாள் தெரு, கோயமுத்தூர்

வட ஆற்காடு ஜில்லாவுக்கு:

சேகர்ஸ், திருப்பத்தூர் (N. A.)




# 'ஜீவான்ஜன்'

சரீரத்தின் மேல் தடவி
தேய்ப்பதற்கும் ஆவியாக
சுவாசிப்பதற்கும்
உபயோகரமானது
ரஸாயனக் களிம்பு. மிருக
கொழுப்பு சேராதது

தயாரிப்பவர்கள்
ஜீவான்ஜன் லாபொரட்டரீஸ் லிட்.
மதராஸ்-14




ஜீவான்ஜன்

ஸோல் ஏஜண்டுகள்
**கே.கே.பிள்ளை & கோ**
ராயப்பேட்டை, மதராஸ்-14

# ஜீவான்ஜன்

REGD. NO. M. 4392

இப்பொழுது விற்கப்படுகிறது!
முன்னைவிட சிறந்தது !

இந்த புதிய கிப்ஸ் எஸ்·ஆர்·
டூத் பேஸ்ட்




உறுதியாகவும் நோயற்றதாகவும்
உள்ள ஈறுகளில்
-பளபளப்புள்ள வெண்மையான பற்களுக்கு

GSR. 61-50 TM